# சிரிப்பைச் சேர்த்து வைக்கிறேன்!

சிரிப்பைச் சேர்த்து வைக்கிறேன்
தினமும் சேர்த்து வைக்கிறேன்,
செல்வம் வேறே சேர்க்கவில்லை,
சிரிப்பைத் தேடிச் சேர்க்கிறேன்.

சின்ன வயதில் பார்ப்போர் அளிக்கும்
பரிசாய்ச் சேர்த்து வைக்கிறேன்,
பெரிசாய் வளரச் சேர்க்கிறேன்.

என்னைப் பார்த்து நேரு சிரித்த
நினைவை நெஞ்சில் சேர்க்கிறேன்,
புனிதம் கூட்டிச் சேர்க்கிறேன்.

அம்மா அக்கா தாத்தா பாட்டி
அப்பா சிரிப்பைச் சேர்க்கிறேன்,
தப்பா தன்பைச் சேர்க்கிறேன்.

வண்ணச் சிரிப்பை எண்ணிச்சேர்ப்பேன்,
எனது வாழ்க்கைச் செல்வமாய்,
மனது நிறையம் செல்வமாய்.

சிரிப்பைச் சேர்த்து வைக்கிறேன்,
தினமும் சேர்த்து வைக்கிறேன்!
சேர்க்க வேறே செல்வம் இல்லை,
சிரிப்பைத் தேடிச் சேர்க்கிறேன்!

—தம்பி சீனிவாசன்



# வெள்ளிப் பனிமலையில் ஒரு வெற்றி!




⌘ மலை உச்சியில் ரங்கநாதனும், ஐயம் பெருமாளும்

“புனிதமான அந்த பேபி ஷிவ்லிங்கை உங்கள் காலால் தொடப் போகிறீர்களா? நீங்கள் நாசமாகத்தான் போவீர்கள்! கடவுள் உங்களுக்குத் துணை புரியவே மாட்டார். நீங்கள் அந்த மலை உச்சியை அடைவதை நான் பார்த்து விடுகிறேன்!''

''எத்தனையோ இடைஞ்சல்களைக் கடந்து, 16,500 அடி உயரத்தில் இமயமலையில் உள்ள தபோ வனத்துக்குப் போய்ச் சேர்ந்த எங்களுக்குக் கிடைத்த வாழ்த்துரை இது! புனிதமான இமய மலையின் சிகரங்களில் காலடி படக்கூடாதாம். பின்னே, தலை யாவா தொடுவது? கண்ணப்பர் வைக்கவில் லையா காலை சிவலிங்கத்தின் மீது? எப்படியோ எல்லா இடைஞ்சல்களையும், சாபங்களையும் கடந்து பேபி ஷிவ்லிங் எனப்படும் 18,500 அடி உயரத்தில் இருக்கும் சிகரத்தை அடைந்து விட்டோம்'' (சிவலிங்கம் என்பது தான் ஷிவ்லிங் ஆகியிருக்கிறது போலும்!) என்று வெற்றிப் பெருமிதத்துடன் சிரிக்கிறார் மலையேறும் குழுவின் தலைவரான திரு பாளையம்.

இவர்களின் பயணமே ஒரு சுவையான திகில் கதையாகத்தான் இருக்கிறது. இப் பயணத்தில் வெற்றி பெற்ற மூவருள் ஒருவர் திரு பாளையம். மற்ற இருவரான திரு ஐயம் பெருமாளும், திரு ரங்கநாதனும் 'கல்கி இரட்டையர்கள்' என்று அழைக்கப்பட்டார்களாம். எதனால்?

1980ம் ஆண்டு என்ஃபீல்டு நிறுவனமும் கல்கியும் சேர்ந்து மலையேறும் போட்டி ஒன்றை நடத்தியது. என்ஃபீல்டு நிறுவன அதிபர் திரு விசுவநாதன் வெற்றி பெற்றவர்களுக்குப் பரிசாக ரூ. 1000 தரச் சம்மதித்தார். திருத்தணி அருகில் உள்ள ‘கைலம் குன்று' என்னும் மலையில் இந்தப் போட்டி நடந்து அந்த மலையில் ஏறி வெற்றி பெற்ற அந்த ஐயம்பெருமாளும், ரங்கநாதனும், இப்போது 18,500 அடி உயரமுள்ள பேபி ஷிவ்லிங்கிலும் வெற்றிக் கொடி நாட்டியிருக்கிறார்கள். அதனால்தான் இவர்களை வழி நெடுக 'கல்கி இரட்டையர்கள்' என்ற பட்டப் பெயரில் அழைத்திருக்கிறார்கள்.

பிரபல மலையேறும் நிபுணர் திரு ஜே. ரமணன் ஆரம்பித்து வைத்த அமைப்புத்தான்

⌘ பனிப்பாறை நடுவே நால்வர்



⌘ தபோவனத்தில் உயர்மட்டதளம்



'கிரி விஹாரி மண்டல்'. இந்தச் சங்கத்தின் மூலமாகத்தான் பாலையத்தின் தலைமையில் பதினொரு பேர் பேபி ஷிவ்லிங்கை அடையப் போனார்கள்....

''முதல் கோணல் முற்றும் கோணல் என்பார்கள். எங்களுக்கும் முதல் கோணல், இரண்டாம் கோணல் என்று ஏற்பட்டாலும் கடைசியில் வெற்றி பெற்று விட்டோம். முதல் கோணலைச் சொல்லட்டுமா?

''செப்டம்பர் 12ந் தேதி நாங்கள் புறப் பட நாள் குறித்து ரிசர்வேஷன் செய்து விட்டோம். அன்றைக்குத்தான் தமிழக அரசு 'பந்த்' என்று அறிவித்தது. வீதிகள் எல்லாம் வெறிச்சோடிக் கிடந்த போட் டோக்களைப் பத்திரிகைகள் பிரசுரித்தனவே! இந்த அழகில் எங்களின் மூட்டை முடிச்சுக்களோடு எப்படி ஸ்டேஷனுக்குப் போய்ச் சேருவது? டாக்ஸியோ, ஆட் டோவோ எதுவும் கிடையாது! படாத பாடு பட்டுப் போய்ச் சேர்ந்தோம். நல்ல காலம், நாங்கள் போன ரயில் கவிழவில்லை!

12ந் தேதி 'பந்தை'க் கடந்து 15ந் தேதி ரிஷிகேஷ் போய்ச் சேர்ந்தோம். அன்றைக்கு அங்கு ஹர்த்தால்! ஆட்டோவோ டாக் ஸியோ, ஹோட்டலோ கிடையாது. இருந் ததைக் கொண்டு சமாளித்துக் கொண்டு மலை அடிவாரத்துக்குப் போய்ச் சேர்ந்தோம்.

உத்தரகாசி என்னும் இவ்வூரில்தான் மலையேறும் பயிற்சி அளிக்கும் நிலையம் உள்ளது. இங்குதான் நமக்கு, கைடு, வேலை யாட்கள் எல்லாம் கிடைப்பார்கள். ஒரு கைடையும், சாமான்களைத் தூக்கிக் கொண்டு வர பதினொரு வேலையாட்களையும் ஏற்பாடு செய்துவிட்டு நிம்மதியாகப் படுக்கப் போனோம்.

'சரி, எல்லா இடைஞ்சல்களையும் கடந் தாகி விட்டது. இனிமேல் நமக்கென்ன கவலை' என்று ஹாய்யாகத்தூங்கி விட்டு மறு நாள் எழுந்தால் இடிபோல செய்தி வந்தது.



⌘ பனிப்பாதையில் 'பேபி ஷிவ்லிங்' நோக்கி

எங்களுக்கு முன்னே சென்ற வேறோர் குழுவின் ஜீப் கவிழ்ந்து, மூன்று போர்ட் டர்கள் இறந்து விட்டார்களாம்! அவர் களுக்கு அனுதாபம் தெரிவிக்கும் வகையில் மற்றவர்கள் வேலை நிறுத்தம் செய்தார்கள். எங்களுக்கும் உள்ளூற உதறல்எடுத்துக்கொண் டது. ஒரு வழியாகத் தைரியப்படுத்திக் கொண்டு மறுநாள் புறப்பட்டோம்.

நடுவில் ஒரிருவருக்கு அவ்வப்போது உடல் நலம் சீர்கெட்டது. அவ்வப்பொழுது ஆசு வாசப்படுத்திக்கொண்டு 12,700 அடி உய ரத்தில் உள்ள 'கோமுக்'கை அடைந்தோம்.

⌘ என்ஃபீல்ட் அதிபர் திரு விஸ்வநாதன் ரங்கநாதனையும் ஐயம்பெருமாளையும், பாலையத்தையும் வாழ்த்துகிறார்.

எங்கள் மனமெல்லாம் பரவசம் அடைந்தது. இங்குதான் நமது பாரதத்தின் புனிதமான கங்கை தன் யாத்திரையைத் துவக்குகிறாள். இந்த நதித் தேவதையை வணங்கி வழிபட்டோம். அங்கிருந்து பார்க்கும் போது நாங்கள் அடைய வேண்டிய சிகரமான பேபி ஷிவ்லிங் தெரிந்தது. கங்கா தேவியின் கருணையோடு மறுநாள் புறப்பட்டுவிடலாம் என்று நினைத்தபோது வானிலை மிகவும் மோசமாக இருந்தது. அந்த நிலையில் உடல்நலம் சரியில்லாததால் மூவர் தங்கி விட்டார்கள். மீதி எட்டுப் பேரும் பயணத்தைத் தொடர்ந்தோம்.

எங்களுடைய அடுத்த தங்குமிடம் 'தபோவன்.' இங்குதான் அங்கிருந்த வேலைக்காரன் ஒருவன் எங்களைச் சபித்தான். இமயமலை சிவனின் இருப்பிடமாகக் கருதப்படுவதால் அங்கு மனிதர்களின் காலடி படக் கூடாது என்பது அவனுடைய நம்பிக்கை. ஏற்கனவே அரண்டு போயிருந்த எங்களுக்கு அவனுடைய பேச்சு கஷ்டமாகத்தான் இருந்தது. போதாததற்கு, எதிர்ப்பட்ட வெளிநாட்டுக் குழு வொன்றும் எச்சரித்தது. வானிலை மிகவும் மோசம் என்று. மேலும் மூவர் அங்கேயே தங்கிவிட்டார்கள்.

ஐந்துபேர் மட்டும் திட மனத்துடன் எப்படியும் சிகர உச்சியை அடைந்தே தீருவது என்றிருந்தோம். நான்கு நாட்கள் காத்திருந்து ஓரளவு வானிலை சீரடைந்தவுடன் ஐந்து பேர் கொண்ட எங்கள் குழு புறப்பட்டது. ராமகிருஷ்ணன், நாகின் ஆகியோர் எங்கள் மூவருடன் இருந்தார்கள்.

இந்தக் கடைசிப் பயணத்தில்தான் மிகவும் கஷ்டப்பட்டு விட்டோம். இடுப்பு வரை பனிக்கட்டிகள் மூடிக் கொண்டன. எப்படி காலை எடுத்து நடப்பது? மலையேறுவதற்குப் போட்டுக் கொண்டுள்ள 'டிரஸ்'ஸே கனம். 'ஹண்டர் ஷூ' எனப்படும் ஷூவோ ஏகத் தகராறு. பேசாமல் திரும்பிவிடலாம் என்று பலமுறை தோன்றியது.

உச்சிக்கு 400 அடி இருந்த நிலையில் ராமகிருஷ்ணனும் நாகினும் திரும்பி விட்டார்கள். நாங்கள் மட்டும் தொடர்ந்தோம். பனிக் கட்டிகள் மார்புவரை மூட மெதுவாக ஒவ்வோர் அடியும் எடுத்து வைப்பதே ஒரு சாதனை போல இருந்தது. 'பேபி'யும் எங்களுக்குச் சவால் விட்டுக் கொண்டு நின்றது.

மெதுவாக முன்னேறி ,மலையின் உச்சியில் ஏறி இரிவிஹாரி மண்டலின் கொடியை நட்டபோது நாங்கள் மூவரும் அழுதே விட்டோம். அப்படியே பரவச நிலையில் நின்றிருந்தோம். எவ்வளவு இடைஞ்சல்கள், தடைகள்! சென்னையில் இருந்து ஆரம்பித்த எங்களின் பயணம் கண் முன்னால் திரைப் படம் போல ஓடியது. மெதுவாகச் சுதாரித்துக்கொண்டு ஒருவருக்கொருவர் வாழ்த்துத் தெரிவித்துக் கொண்டோம்.

மூவரே உச்சியை அடைந்தாலும் மற்ற எட்டுப் பேருக்கும் இந்தப் பெருமையில் பங்குண்டு'' என்று முடித்தார் குழுவின் தலைவர் திரு பாலையம்.

பேட்டி: பி. ரங்கநாயகி
புகைப்படங்கள்: பாலையம்,
ஸ்ரீனிவாசகுமார்



✖ பொட்டேடோ-சிவராமன்

# ஓஸிபிஸாவுடன் ஒரு நாள்!

நவம்பர் 5ந் தேதி. நேரு ஸ்டேடியம். கட்டவிழ்த்து விடப்பட்ட ஓஸிபிஸா இசை காதைக் கிழிக்கிறது. மேடை பவர் விளக்கொளியில் ஜொலிக்கிறது. சென்னை வாழ் ராக் அண்டு ரோல் ரசிகர்கள் மழையை, சேறு-சகதியைப் பொருட்படுத்தாமல் உற்சாகமாக ஆடுகிறார்கள்!

நரம்புகளை முறுக்கேற வைத்து இதயத் துடிப்பை அதிகரிக்கப் பண்ணி, குஷியாக உடலைக் குலுக்கி ஆடச் செய்கிற இந்த இசையில் தாளத்துக்கே முக்கிய இடம். எனவே நமது தமிழக லய வித்வான்களில் முன்னணியில் இருக்கும் உமையாள்புரம் சிவராமனை, ஓஸிபிஸா டிரம் நிபுணர் டாக்கு பொட்டேடோவைச் சந்திக்க வேண்டினோம். சிவராமன் மகிழ்ச்சியுடன் உடனே சம்மதிக்க, அன்று பிற்பகல் சந்திப்பு ஹோட்டல் சோழாவில் நடந்தது. டாக்கு பொட்டேடோவுக்கு நமது மிருதங்கம், அதன் நுணுக்கங்களை அறிந்து கொள்வதில் இருந்த ஆர்வம் ஆச்சரியமளித்தது. சிவராமன், மிருதங்கத்தின் வலந்தலையில் உள்ள கறுப்பு சோறுதான் அந்த வாத்தியத்தில் எழுகிற பல இனிய தொனிகளுக்கும் அடுக்குத் தொனிகளுக்கும் காரணமாகிறது என்பதை விவரித்தார். இடந்தலையில் கோதுமை மாவு பிசைந்து பூசப்படுவதையும் அது கும்காரங்களை எழுப்புவதில் எப்படி உதவுகிறது என்பதையும் விளக்கினார். பொட்டேடோ அவர் வாசிப்பையும் கேட்கவேண்டும் என்று ஆசைப்பட்டார். இதற்கு ஏற்பாடு செய்யப்பட்டது.

முதலில் ஆதி தாளத்தை வாசித்துக் காட்டினார் சிவராமன். அதில் கதி பேதங்களைப் புகுத்தி விளக்கிச் சொன்னார். ''இன்னும் கொஞ்சம்'' என்று பொட்டேடோ ஆர்வமுடன் கேட்கவே மிச்ர சாபுவில் தனி வாசித்தார் சிவராமன்.

கணித அடிப்படையில் மிருதங்கத்தில் எத்தனை தாள வித்தியாசங்களையும் ஒலியில் எவ்வளவு வித்தியாசங்களையும் காட்ட முடிகிறது என்று உணர்ந்து பொட்டேடோ வியந்துபோனார். சிவராமன் வாசித்து முடிந்ததும் ஆனந்தத்தில் அவரை அப்படியே கட்டிப் பிடித்துக் கொண்டார் பொட்டேடோ! இரவு ஓஸிபிஸா நிகழ்ச்சிக்கு தங்கள் குழுவின் பிரதான விருந்தினராக சிவராமன் வரவேண்டும் என்று கேட்டுக் கொண்டார் பொட்டேடோ. அழைப்பை ஏற்றுக் கொண்ட சிவராமன் தம் அனுபவம் பற்றிப் பேசுகிறார்:

''மனிதனின் இதயத் துடிப்பிலிருந்து தொடங்கி அண்ட சராசரத்தின் இயக்கம் வரை அனைத்தும் லயத்துள் அடங்குகிறது. ''ஸ்ருதி மாதா: லய பிதா'' என்று நமது சாஸ்திரங்கள் கூறுவது எவ்வளவு உண்மை! இந்த இரண்டின் சேர்க்கை ரசிகர்களின் உள்ளத்தில் ஆழ்ந்த அழிக்க முடியாத பாதிப்பை ஏற்படுத்துகிறது. பாங்கோ, கோங்கா, ஆப்ரிக்க டிரம் உள்ளிட்ட டிரம் கிட் எல்லாம் எனக்குக் கேரளத்தின் பஞ்ச வாத்தியங்களை நினைவூட்டின.

''அன்று பாடப்பட்டவையெல்லாம் சதுஸ்ர அல்லது திஸ்ர கதியில் அமைந்தவை. இசையின் வேகமும், தாள வாத்தியங்களின் வேகமும் படிப்படியாய் அதிகரித்து ஓர் உச்ச கட்டத்தை அடைந்து ரசிகர்களுக்கு விவரிக்கவொண்ணாத சந்தோஷத்தைத் தந்தது. ரசிகர்கள் இசையில் தங்களை இழந்து தாளம் போட்டனர், பாடினர், ஆடினர்.

''சில சொல்லுக் கட்டுக்களை அவர்கள் வாசிக்கும்போது சில இடங்களில் அழுத்தமாக வாசிப்பதும், எதிர் நடை சொல்லுக் கட்டுக்களை ' ஆங்காங்கே புகுத்துவதும் இசைக்கு விறுவிறுப்பூட்டி மெருகேற்றின.''

சந்திப்பு ஏற்பாடு: சலன்
புகைப்படம்: யோகா

✖ மிருதங்கத்தைத் தட்டும் பொட்டேடோ



# தொலைபேசியின் நூற்றாண்டு!

**த**மிழக தொலைபேசிக்கு நூற்றாண்டாம், சந்தோஷம்.

கிரஹாம்பெல் டெலிஃபோனைக் கண்டுபிடித்து 105 ஆண்டுகள் ஆகின்றன. டெலிஃபோன் கண்டுபிடிக்கப்பட்டு ஐந்தாவது ஆண்டில் இந்தியாவுக்கு வந்து விட்டது. சுதந்திர ஆட்சியில் 34 ஆண்டுகளும் அதற்கு முன் பிரிட்டிஷ் ஆட்சியிலும் இருந்திருக்கிறது. எனவே மேல்நாடுகளில் அடைந்த அளவு வளர்ச்சி இங்கே எதிர்பார்க்க முடியாதுதான்.

பெரிய அமெரிக்க நகரங்களில் வீதிக்கு நாற்பது ஃபோன் பூத்கள். இங்கே நாற்பது வீதிகளுக்கு ஒரு பப்ளிக் ஃபோன் இருக்கக் கூடாதா? வேண்டாம், பேட்டைக்கு ஒன்று? இருக்கிற ஒன்றிரண்டு ஃபோன் பூத்கள் பழுது படாமலாவது இருக்கப்படாதா? துப்பறியும் கதை எழுதுகிறவன் கூட பப்ளிக் ஃபோன் பூத்தைக் கதையில் பயன்படுத்தத் தயங்குகிறானே ஐயா!

அமெரிக்காவில் ஃபோன் தேவை என்று எங்கிருந்தாவது ஒரு ஃபோன் பண்ணி விலாசம் தந்தால் போதும், நாம் ஜாகைக்குத் திரும்பு முன்னர் அங்கே ஃபோன் நிறுவனத்தின் பிரதிநிதி ஃபோனுடன் காத்திருப்பான். இங்கே பெயரைப் பதிவு செய்துகொண்டு ஆண்டுக் கணக்கில் காத்திருக்கும் நிலைக்கு என்று விடிவுகாலம்?

ஒரு ஃபோன் போட்டு என்கேஜ்ட் தொனி வந்தால் நியூயார்க் வாசி மறுபடி டயல் செய்யத் தேவையில்லை. ஃபோனில் உள்ள ஒரு பட்டனை அமுக்கி விட்டால் போதும். லைன் கிளியர் ஆனதும் தானகக் கனெக்ஷன் கிடைக்கும். அறிவிப்பு மணியும் ஒலிக்கும். இந்தியன் இவ்வளவெல்லாம் எதிர்பார்க்கவில்லை. குறைந்த பட்சம் இந்த கிராஸ்டாக் தொல்லையாவது தீரக் கூடாதா?

அங்கேயெல்லாம் டயல் ஃபோன் மட்டுமின்றி புஷ்பட்டன் ஃபோன், சுவரில் ஃபோன், ஒயர் இல்லாத ஃபோன், பாக்கெட் ஃபோன், காரில் ஃபோன் என்று தினுசு தினுசாய் பல்வேறு நிறங்களில் உள்ளன. நமக்குக் குறைந்தபட்சம் சரியாக இயங்குகிற ஃபோன் ஒன்று தரப்பட்டாலே போதுமே!

சிகாகோ, பிலடல்பியா, மியாமி, ஸான் பிரான்ஸிஸ்கோ ஆகிய நகரங்களில் உள்ள ஒரு நிறுவனத்தின் நான்கு கிளைகளின் மானேஜர்கள் ஃபோன் மூலமே மாநாடு நடத்துகிறார்கள். நமக்கு அவ்வளவு வேண்டாம். இந்த எஸ். டி. டி. அடிக்கடி அவுட் ஆஃப் ஆர்டராகிறதே இதற்காவது விமோசனம் பிறக்காதா?

அங்கே நாளுக்கு நாள் ஃபோன் கால்களுக்குக் கட்டணம் குறைந்து கொண்டே வருகிறது; இங்கே அதிகரிக்காமலாவது இருக்கக் கூடாதா? நாம் செய்யாத ஃபோன் கால்களுக்கு நமக்கு பில் வராமலிருந்தாலே மகிழ்வோமே!

மழையோ, புயலோ, வெள்ளமோ, வரட்சியோ எதுவானாலும் சரி; முழங்காலளவு வெண்பனி மூடிக்கிடந்து சாலைத் தொடர்பு துண்டிக்கப்பட்டாலும் ஃபோன் தொடர்பு இருக்கும் கனடாவிலே. இங்கே ஒரு மழை அடித்தால் நாலு நாளைக்கு ஃபோன் வேலை செய்வதில்லையே சுவாமி! கேட்டால், ''கேபிளில் தண்ணி பூந்துக்கிடுச்சு'' என்கிறாரே!

டயல் டோனுக்குப் பதில் என்கேஜ்ட் டோன் ஒலிப்பதையும், கணக்கு வழக்கற்றுக் கிடைக்கும் ராங் நெம்பர்களையும் சகித்துக் கொள்ளலாம். ஆனால் ஃபோன் டிபார்ட்மெண்ட் ஆட்களே நமது லைனைப் பயன்படுத்தி நம் செலவில் ஃபோன் பண்ணுவதையும், எதிர்க் கட்சியினரின் உரையாடலை ஆளும் கட்சிக்காக ஒட்டுக் கேட்கிற ஒற்றர் வேலையையும் எப்படி பொறுத்துக் கொள்வது?

''தொலைபேசியா? அது தொல்லை பேசியல்லவா!'' என்று தலையில் அடித்துக் கொள்கிற நிலைக்கு என்று முற்றுப்புள்ளி?

நமது குறைகளையெல்லாம் அடுக்கி முறையிட்டால் பாவம், சென்னை டி.ஜி.எம் தான் என்ன செய்வார்? ''விளக்கம் சொல்லத் தயக்கம் இல்லை'' என்று கட்டுரை எழுதுகிறார். அதைப் பி. ஆர். ஓ. மூலம் பத்திரிகைகளுக்கு அனுப்பிப் பிரசுரிக்கக் கோருகிறார்!

அங்கே சாதனைகளுக்குப் பட்டியல் போடுகிறார்கள்; இங்கே வேதனைகளுக்கு விளக்கம் சொல்கிறார்கள்!

1981 நவம்பர் 15
துன்மதி ஐப்பசி 30
மலர்: 40 இதழ்: 16

**கல்கி**



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்




● 'கல்கி' தீபாவளி மலர் கண்டேன். உங்கள் தந்தைக்கு மணியம். உங்களுக்கு மணியம் செல்வன். இரண்டு தலைமுறைப் பந்தத்தின் இனிய இழை ஒரு உன்னதமான மலரை உருவாக்கியிருக்கின்றது.

மணியம் செல்வனுக்கு எனது இதயம் நிறைந்த பாராட்டுக்கள்!

திருச்சி-8 சேவற்கொடியோன்

● வழக்கமாகவே சிறப்பாக வரும் கல்கி தீபாவளி மலர், இவ்வருடம் காலத்திற்கு ஏற்ப தன்னை அழகு படுத்திக்கொண்டுள்ளது. சிஷ்யர்களால் குரு பெருமையடைவார். மகாலிங்கத்தின் ' திரு அருட்பிரகாச வள்ளலார்' கட்டுரை அதைத்தான் நினைவுபடுத்தியது. மற்றபடி எதைச் சொல்வது, எதை விடுவது— திண்டாடுகிறேன்.

ஜல்லிப்பட்டி வி. லக்ஷ்மணன்

● ஒரு சித்திரத் தொடருக்கு இத்தனை முக்கியத்துவமா? டணால் தங்கவேலுவின் நகைச் சுவை அற்புதம். அவர் கதை மேடை நாடகமாகட்டும். நாங்கள் பார்க்கத் தயார்!

சென்னை-39 மஞ்சுளா பாய்

● அப்பாடா! உயிரோடு எங்களை யெல்லாம் கொலை செய்த சித்திரக் கதை முடிகிறது. கதையில் எனக்கு மிகவும் பிடித்த வாக்கியம், 'அடுத்த இதழில் முடியும்' என்பதுதான். ரொம்....ப நன்றி.

பரசலூர் ஆர். நாகராஜன்

● குழந்தை உள்ளம் கொண்ட கவிஞருக்கு நீங்கள் அளித்த கவிதாஞ்சலி மெய்சிலிர்க்க வைத்தது. பாரதியாரைப் பற்றி ராஜாஜி, 'தமிழ்த்தாயின் செல்லக்குழந்தை' என்றாரே, அதுதான் நினைவுக்கு வந்தது.

சென்னை-75 வி.. ச. வாசுதேவன்

● புதுக்கவிதைபிடிக்காதகவிஞனுக்குப் புதுக் கவிதையால் அஞ்சலியா? நீங்கள் வேண்டுமானால் வைரமுத்துவையும், மேத்தாவையும் தலையில் தூக்கி வைத்துக் கொள்ளுங்கள். உருக்கமோ, நிறைவோ இல்லாத அவர்களின் கவிதை என்ன கவிதை?

திருநெல்வேலி-71 இ. வீரபத்ரன்

● அன்புள்ள 'வீர புருஷ'ருக்கு,

எங்களுடைய விரோதிகளான மோசடி மல்லனுக்கும், அயோக்கிய சீமானுக்கும் எதிராக நீங்களாவது குரல் கொடுக்கிறீர்களே! (சனஸ்வரத்துடன்) நன்றி. இப்படிக்கு

நியாயம், சத்தியம்

● 'கந்தர் சஷ்டி' நேரத்தில் அலைவாய் ஆறுமுகனின் திருத்தலம் கண்டேன், நன்றி. கட்டுரை ஏனோ பூர்த்தியடையவில்லை. அங்கு நடக்கும் ஒவ்வொரு நிகழ்ச்சிக்குமே ஒரு கதை உண்டு. ஒன்றிரண்டையாவது குறிப்பிட்டிருக்கலாம்.

திருச்செந்தூர் எஸ். ஹரிஹர சுப்ரமணியம்

● தண்ணீர்...தண்ணீர் மட்டும் ஏ-1 இல்லை; உங்கள் விமரிசனமும் ஏ-1 தான். அந்த வெளியிட்டதும் ஏ-1 தான். ஆமாம், நீங்கள் தான் விமரிசனத்தை மற்ற பத்திரிகைகளுக்கு முன்னால் வெளியிட்டு முந்திக்கொண்டீர்கள்.

சென்னை-44 ராஜலட்சுமி சங்கரதாஸ்

● தி. மு. க., அ. தி. மு. க. அவர்களுக்குள் தாயாதிச்சண்டை போட்டுக் கொள்கிறார்களாம். யார் சொல்வது? சி. எஸ்.! இவர் கட்சி எத்தனை தடவை உருமாறி, எத்தனை பேரிடம் பிரிந்து வந்திருக்கிறது! கொஞ்சம் திரும்பிப் பார்க்கட்டும்.

தூத்துக்குடி இரணியல் கலை

● சி. எஸ். தி.மு.க.வையும், அ.தி.மு.க.வையும் இ. காங்கிரஸோடு கூட்டு சேருவதைச் சகதியில் புரள்வதோடு ஒப்பிடுகிறாரே, இவருடையபதவி எப்படி வந்ததாம்? பதவியில் இருக்கும்போது ஒன்றும், இல்லாதபோது ஒன்றுமாகப் பேசுவது இந்த அரசியல்வாதிகளுக்குத்தான் தகும்.

மதுரை-18 இ. பிரபு

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

மானேஜர்: "இந்தக் கவரை டெஸ்பாட்ச் ராமசாமியிடம் கொடுத்துடுன்னு சொன்னா முடியாதுங்கிறியே...ஏன்?"

லேடிடைப்பிஸ்ட்: "அவர்நாளைஎன்னைப் பெண்பார்க்க எங்க வீட்டுக்கு வர்றார்..., அதற்கு முன் அவர் முன் போய் நிற்க வெட்கமாயிருக்கு!" உ. ராஜாஜி

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

# பஸ்ஸிலே கேட்டவை

● ''ஓய்! இந்தக் கூத்தைக் கேட்டீரா? அமைச்சர் விஜயசாரதி எங்கேயோ போக வேண்டியவர் வழி தப்பி வேறு எங்கோ போய்ச் சேர்ந்து, அங்கு நடந்துகொண்டிருந்த கூட்டத்திலே மேடை ஏறிட்டாராம்! ஏற்கெனவே மேடையில் இருந்த ராஜாராமுக்கு 'இவர் எங்கேடா இங்கே வந்து சேர்ந்தார்'னு ஒரே ஆச்சரியமாய்ப் போச்சாம்!''

''சுவாமி! அமைச்சர் சாலையிலே வழி தப்பிப் போனால் பரவாயில்லே; ஒன்றும் குடிமூழ்கிப் போயிடாது. ஆனா அமைச்சரவை தன் கொள்கைகளிலே வழி தவறிப் போறதை எப்படிச் சகிச்சுக்கிறது? மதுவிலக்கை ரத்து செய்யலேயா? வெட்கக் கேடு!''

''அது மட்டுமா? திடீர்னு ஒரு நாள் 24,000 கிராம அதிகாரிங்களை வேலை நீக்கம் செஞ்சாங்க, கொஞ்சமும் முன் யோசனை இல்லாம. கிராம அதிகாரிங்க நீதி மன்றம் போய் இடைக்கால உத்தரவு பெற்றதன் விளைவு, இப்போ 24000 பேருக்கும் வேலையில்லாமலே மாசம் 150 ரூபாய் கிடைக்குது! இதுவரை இந்த ஜட்டத்துக்காகவே அரசாங்க கஜானாவிலிருந்து அஞ்சு கோடி ரூபா கரைஞ்சிருக்கு. போதாக் குறைக்கு வேலை நீக்கமான கிராம அதிகாரிகளுக்குப் பதில் நியமனமாகியிருக்கிறவங்களுக்குத் தனிச் சம்பளம்! இத பாரும், கருணாநிதி உடன் பிறப்புக்குக் கணக்குக் காட்டியிருக்கார்!''




● ''ஏங்க! ஒரு பக்கம் சர்க்கரை உற்பத்தி ஏகமாக அதிகரிச்சுட்டதாகவும் அயல் நாடுகளுக்கு ஏற்றுமதி பண்ணலாமின்னும் போட்டிருக்காங்க; இன்னொரு பக்கத்திலே நவம்பர் பதினஞ்சு தேதிலேருந்து சர்க்கரை விலை கூடலாம்னும் போட்டிருக்காங்க. அது எப்படிங்க உற்பத்தி அதிகரிச்சா விலை குறையத் தானே வேணும்?''

''அந்தப் பொருளாதாரமெல்லாம் இங்கே செல்லுபடியாகாதுங்க. இங்கே அமுலில் இருக்கிறது லைசென்ஸ் - பர்மிட் - கோட்டா - சோஷலிஸம். இங்கே யெல்லாம் தலை கீழாத்தான் நடக்கும்!''

''சர்க்கரை ஏற்றுமதி பண்ணினா மட்டுமென்னங்க? சர்வதேச மார்க்கெட்டுலே போட்டிபோடவேண்டியிருக்குன்னு சொல்லி நஷ்டத்திலே விப்பாங்க. அதையும் நாம தானே தாங்கிக்கணும்!''

● ''ஹாய்! இங்கிலாந்து டீம் வரது நிச்சயமாயிடுத்து! கங்கிராட்ஸ்!''

''ஆனா பாய்க்காட்டும், குக்கும் வரது அவ்வளோ பிடிக்கலே மேன்!''

''பேத்தாதே! அவங்கதான் தென் ஆப்பிரிக்காவின் இனபேதக் கொள்கையை நாங்க ஒப்புக்கலேன்னு தெளிவா சொல்லியிருக்காங்களே. ஏதோ பணம் கிடைச்சுது, ஆடிட்டு வந்தாங்க. அவ்வளோதான். அது ஒண்ணும் டெஸ்ட் மாட்சுங்க மாதிரி இல்லே.''

''இங்க கூடத்தான் மீனாட்சிபுரங்கள் இருக்கு; அவுங்க இங்க மட்டும் வந்து ஆடலாமா?''

''உளறாதே! அங்கே இனவெறியை அரசாங்கமே வளர்க்குது. இங்கே தீண்டாமையை ஒழிக்க அரசு முயலுது. ஒண்ணுக்கொண்ணு சம்பந்தமே இல்லே!''

''சரி, கறுப்புக் கொடி ரெடி பண்ணலாமா சொல்லு!''

''ஷ்யூர்! ஆனா அமைதியா, கேமுக்கு இடைஞ்சல் இல்லாம...''

● ''போர் தொடுப்பதில்லேன்னு ஒப்பந்தம் செய்துக்கிட ஜியா தயாரா இருக்கானாம்!''

''வுடான்ஸ் வுடறான்யா! ஏராளமா ஆயுதங்களை அமெரிக்காட்டே கேட்டு வாங்கிக்கிட்டே இங்கே போர் துறப்புன்னு என்னய்யா அர்த்தம்?''

''நல்ல அர்த்தம்தான் வாத்யாரே! நிறைய ஆயுதங்களை வாங்கிக்கிட்டிருக்கிற போது-தானே யுத்த மறுப்பு ஒப்பந்தத்துக்கு அவசியமும் அதிகமாவுது? இந்திராம்மா இந்த சான்ஸை உடக்கூடாதுன்றேன். ஒப்பந்தத்தை ஜியா மீறினா, எகிறினா! நாம தண்ணி காட்டலாம்; அதுக்குத் தயாரா இருக்கலாம். ஆனா சமாதானத்துக்கு முயற்சி செய்யறதிலே என்ன தப்பு இருக்குன்னேன்''

— குட்டி கிருஷ்ணன்



# சுவர்ணமுகி

## ஸ்ரீவேணுகோபாலன்

சாதாரண விஜயநகர வீரன் வெறு சல்லிசான ஆடை தரித்துக் கையில் வாளும் ஈட்டியுமே ஆயுதமாக வைத்திருந்தான். ரத்தக்கறை தெரியாமல் இருப்பதற்கு அவர்களில் பலர் கருஞ்சிவப்பு நிறத்தில் அரை ஆடை அணிந்திருந்தார்கள்.

- பய்ஸ்

### 33

டேரேக் ராஜர் அருகில் வந்தவர் பிரான்ஸிஸ் டே!

அர்ச்சனனை அடையாளம் கண்டு, ''இங்கே என்ன மோசடி பண்ணிக் கொண்டிருக்கிறீர்கள்?'' என்று உரிமையோடு கேட்டுநகைத்தான்.

அவன் குதிரை திரும்பிப் பார்த்தது.

''நீங்கள் எங்கே இப்படி?'' என்றான் அர்ச்சனன்.

''கலக்கமான தண்ணீரில் தூண்டில் போடுவது எங்களது பழமொழி. தொழில் கூட'' என்றார் டே.

''யாருக்குத் தூண்டில் போடுகிறீர்கள்?'' என்றான் அர்ச்சனன்.

''அதை உங்களிடம் கேட்டால் கூடச் சரிதான். இப்போது யார் கட்சியை நாங்கள் ஆதரிப்பது? திம்மராஜாவையா, வேங்கட ராஜாவையா?''

''நீங்கள் என்ன தீர்மானத்துடன் வந்தீர்கள்? அதைச் சொல்லுங்கள்'' என்றான் அர்ச்சனன்.

''அதில்தான் எங்கள் இரண்டு பேருக்கும் சண்டை. ராஜர் வேங்கட ராஜாவை ஆதரிக்க வேண்டும் என்கிறான். நான் திம்மராஜாவை ஆதரிக்க வேண்டும் என்கிறேன். நாங்கள் ஒன்றும் படை பலம் எதுவும் கொண்டு வரவில்லை. தளவாடங்களும் உணவும் கொண்டு வந்திருக்கிறோம். நீங்கள் சொல்லுங்கள். இப்போது திம்மராஜாவின் கைதானே ஓங்கி யிருக்கிறது!''

அர்சகனன் தயங்கினான்.

''இங்குள்ள படைகளைப் பார்த்தால் அப்படித்தான் தோன்றுகிறது.''

''அப்போது திம்ம ராஜா பக்கம் சாய வேண்டியதுதானே?''

''சாயலாம். அது தருமம் ஆகாது.''

சிரித்தார் டே. ''அரசாங்க விஷயத்தில் தர்மம் எதுவும் பார்க்க முடியாது.''

''நீங்கள் சொல்வது சரி. ஆனால் பொது ஜனங்கள் தர்மத்தின் பக்கம்தான் இருப்பார்கள்.''

டே நெற்றியைச் சுருக்கினார். அது ஒரு அர்த்தமுள்ள வாதமாகத் தோன்றியது. ''அர்ச்சனா! பட்டத்துச் சண்டைகள் இத்தனை நடந்த பிறகுகூட ஜனங்கள் அரசாங்கத்தை நினைக்கிறார்களா, என்ன?''

''ஏன் நினைக்க மாட்டார்கள்? இங்கே அரசருக்குத் தெய்வத்துக்கு நிகரான மதிப்பும் மரியாதையும் உண்டு. பரம்பரை விஜயநகரின் உண்மை ராஜாதான் வேங்கட ராஜா! நானே அவரைத் தள்ளிவிட்டு வேறு யாராவது வந்தால் மக்கள் அதை ஒத்துக் கொள்ள மாட்டார்கள்.''

''அதைத்தான் நானும் சொன்னேன் அர்ச்சனன்!'' என்று ராஜர் இடையில் புகுந்தான். ''இந்த நாட்டின் சமுதாய எண்ணமே வேறு! தர்மத்தில் நடப்பதைத்தான் ஏற்றுக் கொள்வார்கள்.''

''சரி, ராஜர்! நான் வேங்கட ராஜாவுக்கு உதவத் தயார். ஆனால் நானே அவர் தோற்றுவிட்டால்.... இப்போது பலவீனமாகத்தானே இருக்கிறார்?''

அர்ச்சனன் குறுக்கே புகுந்தான். ''நீங்கள் உதவி செய்ய வந்ததன் நோக்கம் என்ன? என்ன காரணம் கொண்டு உதவி செய்ய முன் வந்திருக்கிறீர்கள்?''

''இது தெரியாதா? இங்கே எங்களுக்கு இசைவான ஒரு ராஜ்யம் ஸ்தாபிதமானால் நாங்கள் நிறையச் சலுகைகள் பெறுவோம். போர்ச்சுக்கீஸியர்களும், டச்சுக்காரர்களும் எங்களுக்கு ரொம்பத் தொல்லை தருகிறார்கள். அவர்களை விரட்டி அடிப்போம்.''

''பிரமாத திட்டம் போட்டு வேலை



செய்கிறீர்கள், டே!'' என்றான் அர்ச்சனன்.

''வெறும் ராஜதந்திரம்!''

''சரி, டே! இப்போது தர்மத்தின் பக்கம் திரும்பினால்தான் எல்லோருக்கும் நன்மையை உண்டாக்கும். திம்மராஜா பட்டத்துக்கு வருகிறார் என்று வையுங்கள். மீண்டும் நாட்டில் கலகம்தான்! அமைதி ஏற்படவே படாது. அதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்.''

டே யோசித்தான். இந்தக் காரணம் அவனுக்கு வலுவாகத் தோன்றியது. அதை டே முதலில் ஆலோசிக்கவில்லை. யார் வந்தாலும் ராஜா என்று சொல்லி விட முடியாது. அப்படி ஒரு பொம்மை ராஜா வந்தபோது நாட்டில் ஏற்பட்ட கொந்தளிப்புக்களை அவர் கேள்விப்பட்டிருக்கிறார்.

இப்போது யாராவது ராஜாவுக்கு உதவி செய்வதை விடத் தர்மத்துக்கு உதவி செய்வது மேல்!

அர்ச்சனன் சொல் பிரகாரம், இந்திய மக்கள் தர்மத்தை அதிகம் விரும்புபவர்கள். அந்ததர்மத்தை ஆங்கிலேயர்களும் கடைப்பிடித்தால் கீர்த்தி நிச்சயம் ஏற்படும்.

''ராஜர்'' என்று அவன் பக்கம் திரும்பினான் பிரான்ஸிஸ் டே! ''உனக்கு வெற்றி! நாம் வேங்கட ராஜா பக்கம் சேருகிறோம்'' என்றான்.

அந்த விநியோகப் படை உடனே தண்டு இறக்கப்பட்டது.

நால்வரும் ஆலோசனையில் இறங்கினார்கள். இரண்டு துருத்திய பாறைகளில் ஏறி மேலே விஸ்தாரமான வட்டப் பாறையில் அமர்ந்தார்கள்.



கிருஷ்ண சந்திரன் தன் கணிப்புக்களைக் கூறினான்.

அர்ச்சுனன் தனது இரண்டாயிரம் படையின் சாத்தியக் கூறுகளைக் கூறினான்.

பிரான்ஸிஸ் டே தாம் கொண்டு வந்திருக்கும் இருநூறுபேர் விநியோகப் படைஉண்மையில் மிகவும் பயிற்சி பெற்ற இந்தியப் படை, இது தவிர அவர்கள் கொண்டு வந்திருக்கும் தீக்கணைகளும், தீக் குடுவைகளும், துப்பாக்கிகளும் பலம் வாய்ந்தவை என்று கூறினான்.

அர்ச்சுனன் கோட்டைக்குள் இருக்கும் நிலைமைகளைக் கூறினான்.

எல்லாரும் ஒரு நாழிகை நேரம் பேசிய பிறகு சற்று இளைப்பாற வேண்டிப் படுத்துக் கொண்டார்கள்.

அதிகாலையில் கடைசி ஜாமத்தில் எழுந்து புறப்படுவதற்கு முன், பெருத்த ஓசைகள் அவர்களைத் திகைக்க வைத்தது.

கோட்டைப் பக்கத்தில் ஏதோ நிகழ்ந்து கொண்டிருந்தது. பெரிய தீவர்த்தி ஊர்வலம் நட்சத்திர ஊர்வலம் போல் தெரிந்தது.

அவைகளிலிருந்து எழும் எண்ணெய்ப் புகை இவ்வளவு தூரம் சிறிது சிறிதே வந்தது.

பிரான்ஸிஸ் டே பைனாகுலரை எடுத்தார். அவருக்குக் கண் பற்றாததால் அர்ச்சுனனிடம் கொடுக்க, அவன் அதன் வழியே பார்த்து, ''ஐயோ, கோட்டைக்குள் படைகள் நுழைகின்றன. வடக்கு வாசலோ, மேற்கு வாசலோ திறந்திருக்கிறது!'' என்று படபடப்புடன் கூறினான்.

டே உடனே ராஜர் பக்கம் திரும்பினார்.

''ராஜர்! என்ன செய்யலாம் '' என்றான்.

''பின்னால் தாக்க வேண்டியதுதான்!'' என்றான் ராஜர்.

''தாக்கினால்?''

''உள்ளே போகிறவர்கள் திரும்புவர்.''

''எல்லோரும் திரும்பினால் நம் படை போதாது!''

''ஒரு கோட்டை வாசல் வழியாகப் பெரும் படை திரும்பி வருவது கடினம்! முதலில் பின்னால் தாக்கப்பட்ட செய்தி முன்னணிக்குப் போவதற்குள் நாம் நிறையக் காரியம் நடத்தலாம்.''

''என்ன சொல்கிறீர்கள் அர்ச்சுனா?''

''புறப்பட வேண்டியதுதான்!''

சீக்கிரம் படைகள் சித்தமாக்கப்பட்டுக் கோட்டை நோக்கி விரைந்தன.

கிழக்கே சிவந்த ரேகைகள் மெல்லியதாக அரும்பும்போது, படைகள் கோட்டைப் பக்கம் நெருங்கி விட்டன.

அவர்கள் எதிர்பார்த்தது போல் வடக்குக் கோட்டை வாசல் திறந்திருந்தது.

அதன் வழியாகக் கோலாகலமாக 'ஜே' போட்டுக் கொண்டு திம்ம ராஜா படைகள் நுழைந்து கொண்டிருந்தன.

ஒரு புற்றுக்குள் பெரிய பாம்பு நுழைவது போன்று இருந்தது அந்தக் காட்சி.

ராஜரும் அர்ச்சுனனும் குதிரைகளை முன்னால் கடு வேகத்தில் செலுத்தி முன்னோட்டம் பார்த்தார்கள்.

திம்ம ராஜா படைகள் குதூகலத்தில் இருந்ததில் பின்னால் வேவு பார்க்கும் இந்தக் குதிரை வீரர்களைப் பற்றிச் சிறிதும் கவலைப் படவில்லை.

''ராஜர்!'' என்று கத்தினான் அர்ச்சுனன்.

இருவரும் குதிரைகளை நிறுத்தினார்கள்.

''அதோ பார்!''

கிழக்குக் கோட்டை வாயிலின் முன் ஒரு படையும், அதன் நடுவே பட்டத்து யானையும் இருந்தது.

திம்ம ராஜாவின் நீலக் கொடி பட்டத்து யானை மீது பறந்தது.

''திம்ம ராஜா அதோ கிழக்குக் கோட்டை வாசல் முன்னால் நிற்கிறார். உள்ளே போன அவர் படைகள் அந்தக் கிழக்கு வாசலைத் திறந்து அவரைக் கோலாகலமாக உள்ளே அழைத்துச் செல்லத் திட்டமிட்டிருக்க வேண்டும். இதுதான் தருணம். நம் படைகளுக்குச் சைகை காட்டு!'' என்றான் அர்ச்சுனன்.

ராஜர் திரும்பினான்.

கையைத் தூக்கிச் சமிக்ஞை செய்தான்.

பிரான்ஸிஸ் டே தூரத்திலிருந்து பதில் சைகை செய்தான்.

அடுத்த கணம் அவனது படை ஒரு பிரம்மாண்டமான அம்பு விரைவிட்டு வருவது போல் பீறியடித்து வந்தது.

குதிரைகள் தாள வரிசையாகச் சடசடத்தன.

பயிற்சி பெற்ற இந்திய வீரர்கள்முகத்தைக் குனிந்து, பற்களை இடுக்கி, ஒரு கையால் ஆயுதத்தை உணர்ந்து கொண்டு ஒரே ஏகாக்கிரமாக இலக்கை நோக்கிப் பறந்து கொண்டிருந்தார்கள்.

அவர்கள் பின்னால் செஞ்சி நாயகரின் இரண்டாயிரம் படைகள் சற்று தளர்ந்து வந்தன.

முன் படைகள் செல்லும் அழகான பாங்கில் பொறுமை கொண்டு தாங்களும் அது போலவே ஒழுங்காகச் சீர் வரிசையில் பாய்ந்து செல்லப் பார்த்தன.

திம்ம ராஜாவின் மெய்க் காவல் படை என்ன நடக்கிறது என்று அறிவதற்கு முன், அதன் பிருஷ்டத்தில் சரியான உதை ஒன்று கிடைத்தது.

எல்லோரும் ஆச்சரியமுடன் திரும்பிப் பார்க்க அவர்கள் கண்களை நம்ப முடியவில்லை,

யார் படை இது, எங்கிருந்து வருகிறது எதுவுமே அவர்களால் உணர முடியவில்லை,

திம்ம ராஜாவின் பிரதான சேனாதிபதி திடீரென்று ஆபத்தை உணர்ந்து பக்கத்தில் இருந்த எக்காளக்காரர்களைக் கொண்டு எச்சரிக்கை ஒலிகளை எழுப்பச் சொன்னார்.

இதற்குள் ராஜாவின் படை உள்ளே வியூகம் உடைத்துப் பெரிய சேதங்களை விளைவித்த வண்ணம் முன்னேறிக் கொண்டிருந்தது.

மெய்க்காவல் படையின் இதர பகுதிகள் தம் முன் நடக்கும் நிகழ்ச்சிகளைக் கண்டு ஆயத்தமாகி எதிர்த் தாக்கு செய்வதற்கு முன்னால்,

# பாலநாகம்மா

'பாலநாகம்மா' மீண்டும் தயாராகி வந்திருக்கிறது — கலரில்.

தாத்தா பாட்டி காலத்துக் கதை — இளவரசி, மந்திரவாதி, சூ மந்திரக்காளி, பாட்டு, டான்ஸ், ஏழு கடல் தாண்டுதல் என்று இஷ்டத்துக்கு மீண்டும் சுற்றி யிருக்கிறார்கள். காமடியையாவது மாற்றி யிருக்கக் கூடாதா? இரண்டு பெண்டாட்டி காமெடியும், வண்ணான் துணி துவைக்கும்போது வேட்டி ஜல்லடையாகும் நகைச் சுவையும் காடித் தண்ணீர் போலப் புளிச்சுப் போச்சு.



பாலநாகம்மாவாக ஸ்ரீதேவியைப் பார்ப்பதே ஒரு சுகமான அனுபவம். பெரிய விழிகளும், பளபள உதடுகளும், வாகான உடலும், மாசற்ற நடிப்பும், அற்புதங்கள் புரிகின்றன. மந்திரவாதியின் கற்பனையில் அவர் ஆடும் நடனமும், ஒலிக்கும் பாடலும் கிளுகிளுப்பூட்டும்.

நாக தேவதையாய் கே. ஆர். விஜயாவும், மந்திரவாதியாய் சுதர்ஸனும் பரவாயில்லை. மஞ்சு பார்கவி இருப்பதால் தேவையற்ற நடனங்களும் உண்டு. இது என்ன 'சங்கரா பரணமா?'

சரத் பாபு கத்திச் சண்டை போடுவதைக் கூட மன்னித்து விடலாம். செந்தமிழ் வசனங்களைக் குதறுவதை....? மந்திரவாதியின் சக்தியினால் அவர் குருபியாய் மாறிப் பேச முடியாமல் தத்தளிக்கும்போது பரிதாபப் பட வைக்கிறார்.

தந்திரக் காட்சிகளையும், செட்டிங்குகளையும் இன்றைய நவீன வசதிகளுக்கேற்ப நன்றாகவே செய்திருக்கலாமே? பழைய கறுப்பு வெள்ளைப் படத்திலேயே நன்றாயிருந்ததாய் ஞாபகம். ஒகேனக்கல்லிலும், அரண்மனைகளிலும் என். பாலகிருஷ்ணன் காமிராவை அழகாகக் கையாண்டிருக்கிறார்.

இளையராஜா புதுமையாய் ஏதாவது செய்யட்டும்! அதற்காக இத்தகைய கதையில் போய் Kraftworkன் computer musicஐ அடிக்கடி பின்னணியில் உபயோகிக்கலாமா? மற்றபடி பாடல்கள் நன்றாய்த்தான் இருக்கின்றன.

'பாலநாகம்மா' வந்து விட்டது. யார் கண்டது? 'ஞான சௌந்தரி' 'கணவனே கண்கண்ட தெய்வம்' எல்லாம் மீண்டும் தயாராகி வரலாம்.

— சிந்து ஜீவா

அதன் பின் புறத்தில் கிருஷ்ண சந்திரன் நடத்திய செஞ்சிப் படைகள் ஆவேசமாக வந்து மோதின.

திடீரென்று இரு தாக்குதல் விழ, கலக்க மடைந்த காவல் படைக்கு நாலா திசை களிலிருந்தும் தாக்குதல் வருவது போல் பிரமை ஏற்பட்டது.

இது அவர்களுக்குப் பெரிய விலவிலப்பைக் கொடுக்க, வாளைத் தூக்க வேண்டும் என்ற எண்ணம் · கூட வலுப் பெறாமல் இடமே சோர்ந்து வீழ்ந்தது.

மெய்க் காவலின் விளிம்புகள் சிதறி எறும்புக் கூட்டம் போல் கலைந்தது.

அர்ச்சுனன் மூர்க்கமாய், கண் மூக்குப் பாராமல் முன்னேற, ராஜா அவனுக்கு எச் சரிக்கை செய்தான். ''அர்ச்சுன! வெடிகுண்டு இருக்கிறது. நம் படையில் ஆள் சேதம் வேண்டாம். முதலில் குண்டைப் போட அனுமதி கொடு!'' என்று கத்தினான்.

அர்ச்சுனன் இடம் விட, குதிரைக் காரர்கள் முன்னால் பாய்ந்து ஒரே வரிசை யில் தமது நீளத் துப்பாக்கிகளை வெடித்து விலகி நகர்ந்தார்கள். அவர்களது இடை வெளி வழியாக இரண்டாம் வரிசை குதிரைகள் முன்னால் சென்று தாமும் வரிசையாகக் குண்டுகளை வெடித்துச் சாகச மாக நின்றார்கள். அந்தக் குண்டுகள்தான் அந்தப் படைக்குக் கடைசி மரண அடி!

படை நாறுகளாகப் பிசிறு விட்டு, துரும்புகளாகப் பறந்தன.

''அர்ச்சுனா! பட்டத்து யானையைத் திருப் பாருங்க! விடாதே!'' என்று ராஜா கத்த,

அர்ச்சுனன் தனது வலது பாரிசத்திலிருந்து குதிரையைக் கிளப்பி யானையை நோக்கி விரட்டான்.

குறுக்கே அல்லோலமாக வந்து மோதும் குருட்டு வீரர்களைத் தவிர, வேறு எந்தவித எதிர்ப்பும் இல்லை.

அர்ச்சுனன் அவசரத்தை முன்னிட்டு, எதி ரில் வருபவர்களை ஈட்டியால் தள்ளிப் பீறிக்கொண்டு வழி சமைத்து முன்னால் பாய்ந்தான்.

ராஜா இதற்குள் மறு வழியில் யானை பக்கம் வந்திட அவனது கைத் துப்பாக்கி பெரிய பின்புறங்களோடு திரும்பும் யானை மீது திரும்பியது.

பலத்த ஓசையுடன் கந்தக வெடி வெடித்து யானையின் பின் தொடையைக் காயப் படுத்த அது ஆகாயத்தைக் கிழிக்கும் குரலில் பிளிறி, முன்னும் பின்னுமாகக் கொந்தளித்தது.

மேலே அம்பாரம் 'சாமியாட்டம்' ஆட இம்மராஜா அதிலிருந்து அவசரமாக விலகி னார்.

வெறுப்பும் கோபமும் கொண்டு சுற்றிப் பார்க்க, யானை அல்லாட அவர் விழாமல் இருக்கக் குனிந்து யானையின் பாசக் கயிற் றைப் பிடிக்க,

வெகு அருகில் நெருங்கி விருந்த அர்ச்சு னன் குதிரையிலிருந்து எம்பி, ஹூம் என்று ஒரு ஊங்காரமிட்டு, தனது நீண்ட ஈட்டியைப் பிரமாத வேகமுடன் அவர் மார்பை நோக்கிப் பறக்க விட்டான்.

## கார்த்திகை

நாங்கள்
தீபங்கள் ஏற்றி
வாணஜாலங்கள் காட்டுவது
உன் முழுநிலா விளக்குக்குப்
போட்டியாக என்று
புரிந்துகொண்டாய் போலிருக்கிறது!
மேகக் கண்கள் விரித்து
கண்ணீர் கொட்டி அழும்
ஐப்பசியின் மகளே!
அல்ல, அல்ல
*மாகவிஞன் பாரதியை—
இசைத்தமிழின் முழுநிலவை—
மாணிக்கச் சுடர்விளக்கை—
மண்ணுக்குத் தந்தாயல்லவா!
அந்த நன்றியைக் காட்டத்தான்
வீதியெல்லாம் நாங்கள்
விளக்கேற்றி வைக்கின்றோம்.

—ஜெயரதன்

மேலட்டையில் கார்த்திகை தீபம் ஏற்றி
அலங்கரிப்பவர்: குமாரி சுபத்ரா
வண்ணப்படம்: எம். கே. ராமமூர்த்தி

* பாரதியார் கார்த்திகை மாதம் பிறந்தவர்




இம்மராஜா அரைக் கணம் மேலே நிமிர, வாகாகத் தெரிந்த அவர் மார்பில், அதன் மெத்தைக் கவசத்தைக் கிழித்துக் கொண்டு ஈட்டியின் பருமனான முனை நுழைந்தது.

வலி மின்னல் போல் அடிக்க, வாயைத் திறந்தபடி இம்மராஜா யானை மேலிருந்து தரையை நோக்கி உதிர்ந்தார்.

அவரது கொடியும், அம்பாரமும் அவ ரோடு சேர்ந்து விழ,

அவரது மெய்க்காவல் படை கட்டுக் குலைந்து சிதறி நாலு திசைகளிலும் ஓடின.

(தொடரும்)

# ஏதாவதொரு மிக்ஸரை வாங்கிவிடாதீர்கள்...




# ... உங்கள் தேவைக் கேற்றது ஸுமீத்

அற்புதமான ஸுமீத்! இதன் வகையில் இந்தியாவிலேயே முதலாவது. நாடெங்கிலும் மேன்மேலும் அதிக இல்லத்தரசிகளுக்கு வியப்பூட்டி வருகிறது.

ஸுமீத்தில் மட்டுமே, எல்லா வேலைகளுக்கும் பயனுறும், விசேஷமாக வடிவமைக்கப்பட்ட, பல-பயனுள்ள ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் ஜாடி. அதன்மீது உள்ளே பார்க்கக் கூடிய அக்ரிலிக் மூடி. எனவே ஸுமீத் இயங்குவதைக் கண்ணெதிரில் காணலாம்.

பல்வேறு வேலைகளை விரைவிலும் எளிதிலும் செய்து முடிக்க, இப்போது இதில் 4 அலகு அமைப்பு பாகங்கள்:

- ஈரப் பண்ட அரைவைக்காக.
- உலர் பண்ட அரைவைக்காக.
- கடைய, கலக்க, சாறு பிழிய.
- மாமிசத்தை அரிக்க,
- காய்கறிகளை நறுக்க.

இவை தவிர, சப்பாத்தி, பூரி மற்றும் அப்பளத்துக்காக மாவை விழுதுபோல் பிசைய விசேஷ இணைப்புப் பாகம். அதோடு கேக் மாவை நன்றாகக் கலவை செய்ய விசேஷ 'ஹுக்'...

இவை மட்டுமா? ஸுமீத்தில் 30 நிமிடங்கள் வரை நிற்காமல் ஓடக்கூடிய ஹெவி ட்யூட்டி மோட்டார்.

அற்புதமான ஸுமீத் ஒன்றுதான் முழுமையான கிட்சன் மெஷின். இதை அடைய எத்தனை நாள் வேண்டுமானாலும் காக்கலாம்.



ஈர அரைவை—வடை, இட்லி, தோசைக்காக உளுத்தம் பருப்பு மற்றும் அரிசியை அரைக்க— 3½ நிமிடங்களில்.



உலர் அரைவைக்காக— எல்லா வித மசாலாக்கள்— மிளகாய் வற்றல், மிளகு, மஞ்சள், கொத்துமல்லி விதை ஆகியவற்றை அரைக்க.



பொடிக்க—1 நிமிடத்தில் மாமிசத்தைப் பொடிக்க, காரெட், வெங்காயம், தேங்காய், மற்றும் கொட்டைகளை நறுக்க— விநாடிகளில்.



அரைக்க—2 நிமிடங்களில் தேங்காய் சட்னி அரைக்கலாம். அல்லது விநாடிகளில் கொத்துமல்லி சட்னி அரைக்கலாம்.



கடைய—லஸ்ஸி/மில்க் ஷேக் ஆகியவற்றை ஒரே நிமிடத்தில் தயாரிக்க அல்லது நிமிடங்களில் மயோன்னைஸ் தயாரிக்க. வீட்டிலேயே வெண்ணை கடையலாம்.



மாவு பிசைய—சப்பாத்தி, பூரி, நான் தயாரிக்க 2 நிமிடங்களில் மாவு பிசையலாம். கேக் மாவை மிகவும் சன்னமாகப் பிசையலாம்— 3½ நிமிடங்களில்.

# ஸுமீத்®

## இது ஒன்றே முழுமையான கிட்சன் மெஷின்

இது தவிர கிடைக்கிறது ஸுமீத் டொமஸ்டிக் (பிசையும் இணைப்பு இல்லாமல் கிடைக்கிறது. அதை தனியாகவும் வாங்கிக் கொள்ளலாம்.)

அற்புதமான ஸுமீத் பரவலாகப் பல்வேறு பணிகளைச் செய்கிறது— மற்ற எல்லா வீட்டுப்பயோக மிக்ஸர்களை விடச் சிறப்பாக.

எப்போது நாங்கள் இலவசமாக இயக்கிக் காட்டுகிறோம் என்பதைக் கவனித்து வாருங்கள். உங்களுக்கெனவே ஸுமீத் சிறப்பாக இயங்குவதைக் காணுங்கள்!

தயாரிப்பாளர்கள் : பவர் கண்ட்ரோல் அண்ட் அப்ளையன்ஸஸ் கம்பெனி,
F/11 இண்டஸ்ட்ரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை 600 058, இந்தியா
போன் : 633 340
வெளிநாட்டு அங்கீகரிக்கப்பட்ட விற்பனையாளர்கள் :
மெஸர்ஸ் எலிட் ரேடியோ அண்ட் எஞ்ஜினியரிங் கம்பெனி லிமிடெட்,
26, கெய்ஸர் ஸ்ட்ரீட், கொழும்பு, ஸ்ரீலங்கா, போன் : 29744
மெஸர்ஸ் டொமஸ்டிக் அப்ளையன்ஸஸ் இண்டர்நேஷனல், ஸுமீத் அப்ளையன்ஸ் சென்டர், 401, டான்ஃபோர்ட் அவின்யூ யூனிட் நெ. 14, டோரோன்டோ,
ஒன்டாரியோ, கெனடா M4J-3S2, போன் : (416) 421-2997.
பவர் கண்ட்ரோல் அண்ட் அப்ளையன்ஸஸ் (மலேசியா) Sdn , bhd., 5எ. ஜாலன் 8/1டி,
ஜாலன் கல்தான், பெட்டலிங் ஜாயா, மலேசியா, போன்: 561347/561549
பேகாஸஸ் பிரைவேட் லிமிடெட், 528, ஆர்ச்சர்ட் டவர்ஸ், 400, ஆர்ச்சர்ட் ரோட்,
சிங்கப்பூர் 9. போன்: 2351146

OBM/5628 R /1 TM

# புள்ளிகளைப் பற்றி...



அமுதா

காது கேளாத வாய் பேசாத பெண்களுக்காக தேசிய மகாநாடு புதுதில்லியில் நடந்தது. இப்படிப்பட்டவர்களுக்காக இதுபோன்ற மகாநாடு நடப்பது இதுதான் முதல் தடவை.

இந்த மகாநாட்டில் கலந்துகொள்ள தமிழ் நாட்டிலிருந்து ஆறு பெண்கள் போயிருந்தனர். இவர்களில் குமாரி அமுதா ஒருவர். கல்கி 8–2–81 ஊனமுற்றோர் சிறப்பிதழ் மேலட்டையை அலங்கரித்தவர்.

''கை அசைவுகளிலும், மௌன மொழியிலும் நாங்கள் பேசிக் கொண்டோம். தினமும் காலை எட்டு மணி முதல் இரவு எட்டு மணிவரை மகாநாடு நடந்தது. புதுதில்லியில் உள்ள நட்சத்திர ஹோட்டல்கள்பல எங்களை விருந்தினர்களாக அழைத்து உபசரித்தன. எங்களது பல்வேறு பிரச்னைகளை அலசினோம்'' என்றார் அமுதா.

தினமும் மாலையில் கலை நிகழ்ச்சிகள். ஃபாஷன் பரேட் நடந்து ''MISS DEAF'' பட்டமும் அளித்தார்கள். இதில் குமாரி அமுதாவுக்கு இரண்டாவது பரிசு கிடைத்தது. விலை உயர்ந்த பட்டுப் புடவை பரிசாகக் கொடுத்தார்கள். பேட்டி: ''சிக்கி''

பண்டிதமணி கதிரேசச் செட்டியாருக்கு இது நூற்றாண்டு: நகரத்தார் குலத்தில் பிறந்த இவருக்கு மூன்றாவது வயதில் வாத நோயால் கால் ஊனமாகி விட்டது. இல்லையென்றால் இவருடைய குலத் தொழிலையே மேற்கொண்டிருப்பார். நல்ல காலம் தமிழ் பிழைத்தது!

தமிழ், வடமொழி, சைவம் என முத்திறத்திலும் மூழ்கித் திளைத்த இவருடைய இருபத்தியாறாவது வயதிலேயே இவரை 'மகா வித்வான்' என்று அழைத்தார் அரசசண்முகனார். அரிய படைப்புக்களான சுக்கிர நீதியும், சாணக்கியமும், மண்ணியல் சிறு தேரும் இவருடைய சான்றாண்மைக்குச் சாட்சி கூறுகின்றன.

53 வயதுக்குப் பின் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் ஆசிரியர் பதவி ஏற்ற பின்பும் திருவாசகத்திலேயே மூழ்கித் திளைத்து நேரம் கிடைத்தபோதெல்லாம் உரை எழுதினார். திருவெம்பாவை முடிந்து திருஅம்மானையின் சில பாடல்களுக்கு உரை எழுதிக் கொண்டிருக்கும்போது 1953ல் மறைந்தார்.

இவர் கூறும் பாடல் நயங்களைக் கேட்டு, இவருக்கு, 'தெள்ளிச் சுவை தேரும் செந்நாவான்' என்றே கவிமணி பட்டம் கொடுத்துக் கவி பாடினார்!

ஸ்ரீ பாலகிருஷ்ண சாஸ்திரி சம்ஸ்கிருத விற்பன்னர். இவ்வாண்டு சம்ஸ்கிருதத்துக்கு இவர் ஆற்றியுள்ள பணியைப் பாராட்டி, ஜனாதிபதி விருது வழங்கப்பட்டது. மற்ற விருதுகளுக்கும், இந்த விருதுக்கும் ஒரு முக்கிய வேறுபாடு உண்டு. இந்த விருது பெற்றவர்களுக்கு ஆயுள் முழுவதும் ஆண்டு தோறும் பரிசுத் தொகை வழங்கப்படும்.

மிக உயரிய பட்டமான 'சாஸ்த்திர ரத்னாகரா' பெற்றவர்; சென்னை, கேரளம் பனாரஸ் இந்து பல்கலைக் கழகங்களில் சம்ஸ்கிருதத்துறை தலைவராகப் பணியாற்றியவர்.

வேதம் மற்றும் வேதாந்த புலமை மிக்க சாஸ்திரியின் முன்னோர்களும் காஞ்சி காமகோடி பீடத்தில் மூன்று தலைமுறைகளாய் ஆஸ்தான வித்வானாய் இருந்து வருகிறவர்கள். காஞ்சி காமகோடி பீடம் ஜகத்குரு ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகளுக்கு பூர்வாசிரம காலத்தில் ஏழாண்டுகள் வேத சாஸ்திரங்கள் கற்பித்த பெரும் பேறு பெற்றவர் ஸ்ரீ சாஸ்திரி.

''விருதுஎனக்கில்லை; என் சம்ஸ்கிருதப் புலமைக்குத்தான். காஞ்சி காமகோடி பீடத்தின் அருளாசியின் படி ஒரு டிரஸ்ட் ஏற்படுத்தி, சம்ஸ்கிருத வளர்ச்சிக்கு உபயோகிக்கணும்னு என் ஆசை'' என்கிறார்.

65 வயதாகும் இவர் இப்போதும் குருகுலத்திலும், கோயில்களிலும் தினமும் இலவசமாய் சம்ஸ்கிருதம், மற்றும் வேத பாடங்கள் சொல்லித் தருகிறார்!

—எல். சந்திரமௌலி



பண்டிதமணி



பாலகிருஷ்ண சாஸ்திரி




ரமாமணி சுந்தர்

கணபதிக்குப் பெண்கள் விஷயத்தில் சபலம் கொஞ்சம் அதிகம்தான். அவன் பெயருக்குத் துளிக்கூடப் பொருத்தமில்லாமல் அவன் செய்யும் லீலா விநோதங்களை ஏதோ இளமைக் கோளாறு என்று ஒதுக்கிவிட முடியாது. இருபது வயதில் கல்லூரியில் படிக்கும்பொழுது ஏற்பட்ட இந்தச் சபல புத்தி வயது முப்பத்லைந்தாகியும், இரண்டு குழந்தைகளுக்குத் தந்தையான பிறகும் அவனை விட்ட பாடில்லை.

ஆபீசுக்குப் போகும்பொழுதும் வரும் பொழுதும் காலியான பஸ்ஸைக் கண்டாலே கணபதிக்கு எரிச்சல் பற்றிக் கொண்டு வரும். கூட்டத்தில் முண்டி அடித்து ஏறும் சாக்கில் பெண்களின் இடையில் 'கிச்சுக்கிச்சு' மூட்டுவதற்காகவும், மொழு மொழுவென்று இருக்கும் பெண்களின் தொடைகளைக் கிள்ளுவதற்காகவும் கூட்டமான பஸ்ஸுக்காகத் தவம் கிடப்பான். மனைவியை ரொம்ப ஆசையாக நெரிசல் அதிகமாக இருக்கும் புடவைக் கடைகளுக்கும், பண்டிகை நாட்களில் கோவில்களுக்கும் அழைத்துக் கொண்டு போகத் தவற மாட்டான். ஆனால் சும்மா சொல்லக் கூடாது. இதுவரை அவன் எந்தப் பெண்ணிடமும் வரம்பை மீறியதில்லை. சில்லறை விஷமங்களினால் கிடைக்கும் த்ரில்லே அவனுக்குப் போதுமானதாக இருந்தது!

இப்படி இருக்கையில் ஒரு நாள் அதிருஷ்ட தேவதை உமாதேவியின் உருவில் கணபதியைத் தேடி வந்தாள். ஆபீஸில் டைப்பிஸ்டாக வேலைக்குச் சேர்ந்திருந்த அவளை, மேனேஜர் கணபதிக்கு உதவியாக அவனுடைய செக்‌ஷனுக்கு அனுப்பி வைத்தார். இத்தனை நாட்களாக பஸ்களிலும் கடைத் தெருக்களிலும் செய்து கொண்டிருந்த நிமிட்டு விஷமங்களைச் செய்வதற்கு ஆபீசிலேயே சந்தர்ப்பம் வாய்த்துவிட்டதை எண்ணிக் கணபதிக்கு உற்சாகம் தாளவில்லை.

ஃபைல்களைக் கொடுக்கும் சாக்கில் அவள் அழகிய விரல்களைத் தீண்டுவதிலும், அவள் டைப் அடிக்கும்பொழுது அவள் அருகில் போய் நின்று தற்செயலாகப் படுவது போல் அவள் தோள்பட்டையில் இடிப்பதிலும், கணபதிக்கு 'கிக்' கிடைத்தது.

உமாதேவி வேலைக்குச் சேர்ந்து இரண்டு மாதங்கள் ஆகியிருக்கும். மறுநாள் மீட்டிங்கிற்குத் தேவையான ஸ்டேட்மெண்ட்களை மாலை எத்தனை நேரமானாலும் முடித்து, டைப்பும் செய்து தயாராக வைத்துவிட்டுத்தான் வீட்டுக்குப் போக வேண்டும் என்று மானேஜர் கட்டளை யிட்டிருந்தார். மாலை ஐந்து மணி ஆனவுடன், கணபதியையும், உமாதேவியையும் வாசலில் தூங்கி வழிந்து கொண்டிருந்த பியூனையும் தவிர ஆபீசே காலியாகி விட்டது.

இத்தனை நாட்களாகச் சில்லறை விஷமங்களிலேயே திருப்தி யடைந்திருந்த கணபதிக்கு வாழ்நாளில் முதன் முறையாக இப்படியொரு சந்தர்ப்பம் கிடைக்கவும், அவனுடைய சபலம் வெறியாக மாறியது. அதை அசட்டுத் துணிச்சல் என்று சொல்வதா, மிருக வெறி என்று வர்ணிப்பதா? திடீரென்று கணபதி உமாதேவியைக் கட்டித்

# அன்றாட வாழ்க்கையில் அத்வைதம்

மா க்ருத: கஸ்யஸ்வித் தனம் என்பது ஈசாவாஸ்யம்.

பிறர் பொருளுக்கு ஆசைப்படாதே என்பது இதன் பொருள். இதற்கு ஸ்ரீ சங்கரர் என்ன உரை செய்திருக்கிறார் தெரியுமா? இன்னொருவன் என்று அடுத்தவனைப் பிரித்து எண்ணுவதனால்தானே அவன் பணத்தைக் கண்டு பொறாமைப்படுவதும், பிடுங்கிக் கொள்வதும் ஏற்படுகிறது? அவனை நம்முடன் ஒன்றாக எண்ணி விட்டால், அவன் சுகமும், துக்கமும் நம்முடைய சுக துக்கமாகிவிட்டால், பின்பு போட்டி பொறாமை ஏது? நமக்கு என்று தனியாக ஒன்றை ஒதுக்கி வைக்க வேண்டிய தேவை என்ன? அடுத்தவன் நன்றாக இருந்தால், அது நாம் நன்றாக இருக்கிறோம் என்பதற்குச் சமம். இந்தச் சம உணர்வு, சமுதாய உணர்வு, எல்லோருக்கும் வந்து விட்டால், வேண்டியது வேறொன்றுமில்லை. சாதாரண அன்றாட வாழ்க்கையில் கூட நாம் பின்பற்ற வேண்டிய அத்வைத உண்மையை ஸ்ரீ சங்கரர் உபநிஷத்துக்களின் மூலம் எடுத்துக் காட்டினார். ஒற்றுமையான சர்வதேச உறவு, அரசியல், பொருளாதாரம், சமுதாயவாழ்வு, எல்லாவற்றுக்கும் இந்த அத்வைதமே அடிப்படையாகும். இதைத்தான் வேதம் சொல்கிறது என்று நமது பரமாச்சார்யர்கள் எடுத்துக் காட்டினார்கள்.

எங்கோ, எப்பொழுதோ கிடைப்பதல்ல அத்வைத ஆனந்தம். இந்த வாழ்க்கையிலேயே அமைதியாகவும், சந்தோஷமாகவும், திறமையாகவும் வாழ்ந்து மனைவி மக்களும், உற்றாரும், ஊராரும் மெச்ச, ஈசுவர சிந்தனையோடு, வேற்றுமை வெறுப்புக்கள் இல்லாமல் அன்பு செய்து வாழ்வதற்கும் இந்த அத்வைத உணர்வே ஆதாரமாகும். உலகம் ஒரு குடும்பம்; அதற்குத் தாயார் அம்பாள்; தந்தை ஈசுவரன். இந்த உண்மையை மறக்காமல் வாழ்ந்து எல்லோரும் சிரேயஸ்ஸை அடைய வேண்டும்.

-ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள், காஞ்சி காமகோடி பீடம்



தழுவவும், அவள் பளாரென்று அவன் கன்னத்தில் ஓர் அறை விட்டாளே பார்க்க வேண்டும். கணபதிக்குப் பொறி கலங்கி விட்டது.

''யூ, ராஸ்கல்! உன்னைப் போன்ற ஆண்களை யெல்லாம் சும்மா விடக் கூடாது. நாளைக்கே மானேஜரிடம் உன்னைப் பற்றிக் கம்ப்ளெண்ட் பண்ணப் போகிறேன்'' என்று அவள் படபடவென்று பொரிந்து தள்ளி விட்டு அழுதுகொண்டே ஆபீசை விட்டு வெளியேறியதைத் தூங்கிக் கொண்டிருந்த பியூன்கூடக் கவனித்து விட்டான்.

தான் எத்தனை பெரிய தவறு இழைத்து விட்டோம் என்பது அப்பொழுதுதான் கணபதிக்குப் புரிய ஆரம்பித்தது. சில வரை லீலைகளிலேயே திருப்தியுடன் இருந்த தனக்கு இப்படிப் புத்தி பேதலிப்பானேன்? உமாதேவி நாளைக்கே புகார் எழுதிக் கொடுப்பாள். விசாரணை நடக்கும், அதன் பிறகு வேலை போய்விடும்.

யார் யார் காலையோ பிடித்துப் பதினைந்து வருடங்களுக்கு முன்பு தேடிக் கொண்ட வேலை! கிடைக்கும் எண்ணூறு ரூபாய் சம்பளத்தில் மனைவி, இரு குழந்தைகள், வயதான தாய் இவர்களுக்கு உண்ண உணவும், உடுக்க உடையும் வாங்கவே போதும் போதாதென்ற நிலைமையில், இருக்கும் வேலையும் போய்விட்டால் இண்டர் பெயிலான தனக்கு யார் மறுபடியும் வேலை கொடுப்பார்கள்? அதுவும் இப்படியொரு அவப் பெயருடன் வெளியேறினால்?

என்ன செய்வது என்று தெரியாமல் குழம்பித் தவித்தான் கணபதி. கடவுளே! எனக்கு ஒரு வழி சொல்லேன் அடுத்த வெள்ளிக் கிழமையன்று கோவிலில் தேங்காய் பழத்துடன் வந்து அர்ச்சனை பண்ணுகிறேன். இனி வாழ்நாளில் ஒரு பெண்ணையும் ஏறெடுத்தும் பார்க்க மாட்டேன் என்று சபதம் செய்து கொண்டான்.

திடீரென்று கணபதிக்கு அவர்கள் ஆபீஸ் யூனியனின் காரியதரிசியாக இருக்கும் பலராமனின் ஞாபகம் வந்தது. மானேஜ்மெண்டை எதிர்த்துப் போராடுவதிலாகட்டும், அவர்களைத் தந்திரத்தால் வெல்வதிலாகட்டும் அவன் அசகாயசூரன். நேராக அவன் வீட்டுக்குப் போய், ''ஆபத்பாந்தவா, அனுதரட்சகா!'' என்று அவனிடம் சரணடைந்து விட்டான்.

பலராமன் சிறிது நேரம் தீவிரமாக யோசனை செய்தான். திடீரென்று உற்சாகமாக விசிலடித்தபடியே, ''கண்ணாடி வீட்டில் உள்ளவர்கள் பிறர் மீது கற்களை விட்டு எறியலாமா?'' என்றான்.

''தவறே செய்யாதவன்தான் முதல் கல்லை எறிய வேண்டும் என்று ஏசுநாதர் சொன்னவுடன் கூட்டம் கலைந்தது ஏன்?''

கணபதிக்குக் கோபம் கோபமாக வந்தது. ''நான் சங்கடத்தில் மாட்டிக் கொண்டு தவிக்கிறேன். நீயானால் ஏதோ கேள்வி மேல் கேள்வியாக அடுக்கிக் கொண்டுபோகிறாயே?''

''இக்கேள்விகளின் விடையில்தான் இருக்கிறது இந்தப் பிரச்னையின் தீர்வு. உன்மேல் விசாரணை நடத்தப் போகிறவர்கள் யார்,

குழந்தைக்கு மிகவும் சிறந்தது தாய்ப்பால்.

# நீங்கள் புட்டிப்பால் கொடுக்கும் அவசியம் நேரும்போது <u>கவனமாய்</u> இருங்கள்.

## கீழ்க்காணும் 5 முக்கியமான குறிப்புகளைப் பின்பற்றுங்கள்...

**1.** தொற்று கிருமிகளைத் தவிர்த் திடும் வகையில் பீடிங் பாட்டில், நிப்பிள், மற்றய பாத்திரங்கள் ஆகிய வற்றை நன்கு சுத்தம் செய்து நீரிலிட்டுக் கொதிக்கச் செய்யவும். இல்லையெனில் பாலில் எளிதில் கிருமிகள் தோன்றிவிடும்.

**2.** நீரை பத்து நிமிடம் கொதிக்க வைத்து, உடல் வெப்பத்தைவிட சிறிது அதிகமாகவே ஆற வைத்த பின் பால் பவுடரைக் கலக்கவும்.

**3.** அதிக நீரை கலந்திடாதீர்கள், அதனால் சத்து குறைந்து விடலாம். டின்னின் மேல் கொடுத்துள்ள பால் புகட்டும் அட்டவணையைப் பின்பற்றவும்.

**4.** ஒவ்வொரு முறையும் குழந்தைக் குப் புதிதாக பாலைத் தயாரிக்கவும். மீந்துவிட்ட பாலை குழந்தைக்கு கொடுக்காதீர்கள், அதில் கிருமிகள் தோன்றி கெட்டுவிடுகிறது.

**5.** டின்னின் மேல் கொடுத்துள்ள எல்லா விதிமுறைகளையும் பின் பற்றவும். ஏதாவது சந்தேகம் இருப்பின் டாக்டரிடம் ஆலோசனை கேட்கவும்.

### வாங்குவீர் க்ளாக்ஸோ சன்ஷைன்—நம்பகமான குழந்தைப் பாலுணவு

க்ளாக்ஸோ சன்ஷைன் சரிவிகித ரீதியில் சரியான அளவு புரதம், கொழுப்பு, கார்போஹைட்ரேட், வைட்டமின்கள், தாதுப்பொருட்கள், இரும்புச்சத்து போன்றவற்றைக் கொண்டது. இது சுகாதார முறை யில் தயாரிக்கப்பட்டு, டின்னில் அடைக்கப் படுகிறது. குறிப்பாக குழந்தைகளின் இளம் ஜீரண சக்திக்கு ஏற்றது.




க்ளாக்ஸோ

—தாய்மார்களின் நம்பிக்கைக்குரியது.




CASGLS–IR–203 TAM

யார்? அட்மினிஸ்ட்ரேடிவ் ஆபீஸர் வரதனும், மேனேஜர் ராகவனும். அதற்கு மேல் நம் மானேஜிங் டைரக்டர். இவர்களில் எவன் யோக்கியன்? அவனவன் பண்ணுத அக்கிரமமா! விடு கவலையை! நாம் எல்லோரையும் சமாளிந்து விடலாம்.''

**ம**றுநாள் காலை ஆபீஸில் முதல் வேலையாக வரதனுக்கும், மேனேஜர் ராகவனுக்கும், பின்வரும் கடிதங்களைக் கணபதி பலராமனின் கட்டளையின்படி எழுதி அவரவர்களிடம் மிகப் பவ்யமாகச் சமர்ப்பித்து விட்டு வந்தான்.

திரு வரதன் அவர்களுக்கு,

ஆபீசுக்குப் ஃபேர்னிச்சர்கள் வாங்கும்பொழுது உங்கள் வீட்டுக்கும் ஒரு செட் ஃபேர்னிச்சர்கள் வாங்குவதும், ஆபீஸில் வெள்ளை அடிக்கும்பொழுது தங்கள் இல்லத்தை அதைவிட நேர்த்தியாக டெஸ்டம்பரினால் அலங்கரித்துக் கொள்வதும் யாருக்கும் தெரியாது என்று நினைக்க வேண்டாம். நம் அலுவலகம் அரசாங்கத்தைச் சேர்ந்ததாக இல்லாவிட்டாலும் நமக்கு அரசாங்கத்திலிருந்து கிராண்ட் கிடைப்பதால், விஷயம் பாராளுமன்றம் வரை எட்டிவிடும். உங்களை மாட்டி வைக்க என்னிடம் தேவையான அத்தாட்சிகள் இருக்கின்றன.

இப்படிக்கு, கணபதி



## புகழ்பெற்ற அரங்கம்

தஞ்சையிலே மணிக் கூண்டுக்கு அருகில் இன்னும் இருந்துவரும் நாடக கொட்டகையான ''ராமநாதன் செட்டியார் ஹாலில் பழைய சினிமா நடிகர்கள், நாடக நடிகர்கள் அனைவரும் நாடகம் போட்டு வந்தவர்கள். அந்த மேடையில் நாடகம் போடாத நடிகர்களே கிடையாது.

அந்த மேடையில்தான் முதல் முதலாக அறிஞர் அண்ணா எழுதிய ''ஓர் இரவு'', ''வேலைக்காரி'' என்ற இரு நாடகங்களும் அமரர் திரு கே. ஆர். ராமசாமி அவர்களால் அரங்கேற்றப்பட்டு சுமார் ஒருவருட காலம் தினமும் இரவு 10 மணிக்கு ஆரம்பித்து 2 மணிக்கு முடிந்து கொண்டிருந்தது. தஞ்சையிலும் அதைச் சுற்றி புள்ள ஊர்களிலும் அந்த நாடகத்தைப் பார்க்காதவர்களே இல்லை. அதன் பிறகுதான் படமாக்கப்பட்டது. - ஒருவிரல் கிருஷ்ணாராவ்





இரண்டாவது கடிதம் மானேஜர் ராகவனுக்கு வழங்கப்பட்டது.

மதிப்புக்குரிய திரு ராகவனுக்கு,

கடந்த ஏப்ரல் மாதம் பெங்களூரில் அவசர வேலை என்று டூர் போட்டுக் கொண்டு, பெங்களூருக்கே போகாமல், சென்னையில் நடந்த உங்கள் மருமகளின் திருமணத்தில் ஜரிகை வேட்டியும், ஜிப்பாவுமாக நீங்கள் காட்சியளித்திருக்கும் புகைப்படங்களின் பிரதிகள் தங்களிடம் இருக்கிறதோ இல்லையோ, என்னிடம் நிச்சயமாக இருக்கின்றன. அதனால் எதற்கும் கொஞ்சம் கவனமாக இருக்குமாறு வேண்டிக் கொள்கிறேன்.

இப்படிக்கு, கணபதி.

இக்கடிதங்களைப் படித்து முடித்தவுடன் நடுநடுங்கிப் போன அட்மினிஸ்ட்ரேடிவ் ஆபீஸர் வரதனும், மேனேஜர் ராகவனும் உமாதேவியைக் கூப்பிட்டு அனுப்பினார்கள்.

''நீ சின்னப் பொண், புதிதாக வேலைக்குச் சேர்ந்திருக்கிறாய். கூட வேலை செய்யும் ஆண்களுடன் எப்படிப்பழக வேண்டும் என்று உனக்குத் தெரிய வேண்டும். அனாவசியமாக அவர்களுக்கு இடம் கொடுத்துவிட்டுப் பின்னால் இப்படியெல்லாம் புகார் எழுதிக் கொடுத்தால் உன் பெயர்தான் சந்திசிரிக்கும்! இனிமேல் ஆண்களுடன் ஜாக்கிரதையாகப் பழகு'' என்று அவளுக்குப் புத்திமதி சொல்லி அனுப்பி விட்டார்கள்.

கணபதிக்கும் பலராமனுக்கும் தங்கள் வெற்றியை நினைத்து உற்சாகம் தாங்கமுடியவில்லை. இருந்தாலும் கணபதிக்கு ஒரு சந்தேகம். உமாதேவி ஒருவேளை நேராக மானேஜிங் டைரக்டரிடமே போய்விட்டால்? பலராமன் பலமாகச் சிரித்தான். நம் மானேஜிங் டைரக்டர் இந்த ஆபீஸில் தன்னுடைய எட்டு வருட சர்வீஸில் இருபது பெண் காரியதரிசிகளை மாற்றியதன் மர்மத்தைப் பிட் நோட்டீஸ் அடித்து ஊர் முழுவதும் பறக்க விடுவேன் என்று தோள் கொட்டினான்.

கணபதிக்குப் பெரிய பளு ஒன்று இறங்கினாற்போல் இருந்தது. இந்த இரண்டு நாட்களாக என்ன டென்ஷன்! இனிமேல் பெண்கள் வம்புக்கே போகக் கூடாது என்ற உறுதியான தீர்மானத்துடன் தன் வேண்டுதலை நிறைவேற்றுவதற்காக அடுத்த வெள்ளிக் கிழமை அன்று தேங்காய் விற்கும் விலையில் தேங்காய், பூ, பழம், ஊதுவத்தி, சூடன் அடங்கிய அர்ச்சனைத் தட்டு ஒன்றை வாங்கிக் கொண்டு கோவிலைப் பார்த்து நடையைக் கட்டினான்.

கோவிலில் நுழைந்தால் தெய்வத்தின் முன்பு கை கூப்பிய வண்ணம் மொழுமொழு வென்ற கன்னமும், நைலக்ஸ் புடவையும், உடல் அழகை எடுத்துக் காட்டும் பிடிப்பான பளவுசுமாக உமாதேவி நின்றுகொண்டிருந்தாள். அவ்வளவுதான்! உமாதேவியின் தரிசனத்தில் கணபதி தன் சபதத்தை மறந்தான், வேண்டுதலை மறந்தான், கையில் இருந்த அர்ச்சனைத் தட்டை மறந்தான். மறுபடியும் அவளிடம் இழைவதற்காகப் பல்லை இளித்துக் கொண்டு கோவில் வாசற்படியிலேயே மெய்மறந்து நின்று விட்டான்!

# யோக நடனம்

அரங்கில் வெளிச்சம் பரவு முன் பிரணவ மந்திரம் போல் ஒற்றைச் சொல்லோசை நிதானமாய் எழுந்து வலுத்துக் கொண்டே வருகிறது. ஓசையின் உக்கிரமே இருட்டை விரட்டுவது போல் இருள் சிறுகச் சிறுக விலகி அரங்கில் வடிவங்கள் புலப்படத் தொடங்குகின்றன.

மேடை நடுவே மூவர் முக்கோண அமைப்பில் சிலையெனப் பத்மாசனமிட்டு அமர்ந்



✖ பூமி லெஸ்கோ

துள்ளனர். ஒவ்வொருவர் முன்னும் பெரிய பந்து போன்ற கண்ணாடிக் கோளம் ஒன்று. அதனுள்ளிருந்து மெல்ல மெல்ல விரற்கடைப் பருமனில் தீப்பிழம்பு எழுகிறது.... பத்மாசனமிட்டு அமர்ந்திருப்போர் மெதுவாக அசையத் தொடங்கி, தளைகள் அறுபட்ட ஆனந்தப் பெருக்கில் ஆடத் தொடங்குகிறார்கள்!

உடல் எனும் சிறையிலிருந்து ஆன்மா மெல்ல வெளிப்பட்டு விவகார உலகின் புவி ஈர்ப்பு ஆதிக்கத்திலிருந்து விடுபட்டு இன்ப வெளியில் சுதந்திரப் பறவையாய்ப் பறந்து திரிகிறது!

அண்மையில் சென்னைக்கு வந்திருந்த பாரிஸ் நடனக் குழு ஒன்று மியூசியம் தியேட்டரில் நிகழ்த்திக் காட்டிய நடன நிகழ்ச்சி தான் இது. குழுவின் பெயரே ஹனுமான் டான்ஸ் தியேட்டர்! பாரிஸ் நகராண்மைக் கழகம் அளிக்கும் நிதி உதவியுடன் இயங்கி வருகிறது இந்த நடனக் குழு. சென்னை, பிரெஞ்சு கலாசார கேந்திரமும் (அலியான்ஸ் பிரான்சேய்ஸ்) நேஷனல் டுபாக்கோ நிறுவனமும் இணைந்து சென்னையில் இக்குழுவின் நடன நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்திருந்தன.

இந்தியத் தத்துவங்களும் சிந்தனைகளும் மேற்கத்தியக் கலை வடிவங்களுக்கு எந்த அளவுக்கு உத்வேகமளித்து வருகின்றன என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டு, பாரிஸ் நகரத்து ஹனுமான் டான்ஸ் தியேட்டர். இக் குழுவின் நடன நிகழ்ச்சிகளைத் தயாரித்து அவற்றில் முக்கிய பங்கு வகிப்பவர் பூமிலெஸ்கோ என்ற பெண்மணி. யோகப் பயிற்சி முறைகளை தமது நாட்டிய அமைப்புகளுக்குத் தூண்டுகோல் என்கிறார் இவர். இவரது நாட்டிய நிகழ்ச்சிகளுக்கு இசை அமைத்துக் கொடுப்பவர் ழீல் பெத்தி என்ற இசைக் கலைஞர். பிரமிக்க வைக்கும் கனத்த சாரீர வளம். ஹிந்துஸ்தானி இசையில் நல்ல தேர்ச்சி பெற்றிருக்கிறார்.

''கலைஞனுக்கு சர்வ சுதந்திரமளிப்பதுஇந்திய இசைதான். ராக ஆலாபனைகளிலிருந்தே இதைக் கண்டு கொள்ளலாம். இந்திய இசை, கலைஞனின் கற்பனைக்குத் தடை விதிப்பதில்லை. மேற்கத்திய இசைக்கு இந்தத் தாராள மனப்பான்மை கிடையாது'' என்கிறார் ழீல் பெத்தி.

இவர் தத்துவ இசையை வெறும் ராக ஆலாபனை வடிவிலேயே அமைத்துக் கொள்கிறார். வார்த்தைகள் கிடையாது.

தமது நாட்டிய இசைக்கெனத் தாமே ஓர் இசைக் கருவியை உருவாக்கிக் கொண்டிருக்கிறார். இந்த இசைக் கருவியை வயலினைப் போல் வாசிக்கவும் வீணையாய் மீட்டவும், தபேலாவாகத் தாளம் தட்டவும் சமயத்துக்கேற்பப் பயன்படுத்திக் கொள்கிறார். ''இதன் பெயர் அஹ்கோஜோல். அப்படி என்றால் வில் என்று அர்த்தம்'' என்று பாணம் விடுவது போல் அபிநயித்துக் காட்டுகிறார் ழீல் பெத்தி. —மலர் மன்னன்

✖ ழீல் பெத்தி



நாக்கு மேலண்ணத்தில் சுழற்றிக்கொண்டது. பேச்சு வாய்க்குள்ளேயே பந்தாடிற்று. பிரமிப்புக் கொஞ்சம் கூடுதலாய்ப் போனதில் இத்தனை நேரம் கஷிக் கொண்டிருந்த வலிகூடத் திசை மாறிற்று. சாணளவு திறந்த கதவைச் சுவரில் அறைபடுகிற மாதிரி பரக்கத் திறந்தன கைகள். சந்தோஷத் தடுமாற்றத்தில் கைகள் திடுமென்று விரிர்த்தன.

''ஹேய் ரோகிணி....''

ராஜிதான்! அவளால்தான் இப்படி உயிரோட்டம் பாய்கிறகுரல் எழுப்ப முடியும்.

''ராஜி.... வா ராஜி.... உள்ளவா ராஜி''

உருளைகள் இடையில் நுழைக்கப்பட்ட கரும்பாய் வார்த்தைகள் சக்கையாய் இடறி வெளி வந்தன. கண் மட்டும் சந்தோஷத்தைக் கொண்டாடும் வகையில் அகன்று போயிற்று. ராஜியின் தோளைத் தாண்டிப் பார்வை தெருவில் பரவியபோது அந்தக் கார் தெரிந்தது. ராஜ வாகனமாய் முக்கால் தெருவை அடைத்துக் கொண்டு. டிரைவர் இன்னும் கட்டளைக்காய்க் காத்திருப்பவனாய் மூடின கதவில் உடலை லேசாய் இருத்தியிருந்தான். ரோகிணிக்கு லேசாய்ப் புன்முறுவல் கூடிற்று. இந்தத் தெருவில் எப்படி காரில் வர முடிந்தது? ராஜியைக் கைப் பிடித்து உள்ளே அழைத்து வருகையில்மெதுவாய் உடல் அசத்திற்று. வயிற்றோரத்து வலி புதுசாய்க் கோபம் காட்டிற்று.

''ஜமாய்ச்சுக்கிட்டு இருக்கே போலிருக்கு! எத்தனை மாசம் ரோகிணி ''

ரோகிணிக்கு இயல்பாய்க் கன்ன மேடுகளின் கறுப்பூடே சிவப்போடிற்று.

''நாலு மாசம்... ஊருக்கு எப்ப வந்தே ராஜி.... வரப் போறேன்னு லெட்டர் கூடப் போடலியே ... என்ன சாப்பிடறே? எங்க வீட்டுலல்லாம் காப்பி சாப்பிடுவியா, இல்லே கூல்ட்ரிங்குக்குச் சொல்லவா?''

ராஜி சட்டென நின்றாள். அடிபட்ட வேதனை முகத்தில் தெரிந்தது.

''என்னைக்கூடவா ரோகிணி நீ அப்படி நெனைக்கணும்? உன்னைத் தேடி இந்த வட்டாரம் பூராச் சுத்திச் சுத்தி வந்து கடைசில கண்டு பிடிச்சுட்டோம்கிற சந்தோஷம் மனசிலே விளம்பறதுக்கு முன்னாடி இப்படி பொட்டுனு அடிச்சிட்டியே...'' – வேதனை இழைகள் ஓடுகிற குரலைக் கேட்டதும் ரோகிணிக்கு மனம் பொசுங்கிற்று.

''ஸாரி ராஜி.... உக்காரு... காஃபி போடறேன்...''

ராஜி உட்காராமல் வீட்டைச் சுற்றிப் பார்வையை ஓட்டினாள். பத்தடிக்குப் பத்தடியில் இரண்டு பக்கங்களிலும் கசிந்த சுவர்கள். நாய் குதறின ரொட்டி மாதிரி குழி விழுந்த தரை. இரண்டு சுவர்கள் சேர்கிற மூலையில் பிரிமணைகளில் பானைகள். ஒன்று மூடியும் மூடாமலும் ஒன்று மூடாமலும்... நேர் மேலே சிலந்தி ஒன்று முனைந்து முனைந்து கூடு கட்டிக்கொண்டிருந்தது. எதிரெதிர் சுவர்களில் அறையப்பட்ட ஆணிகளுக்காய் இழுத்துக் கட்டப்பட்ட கயிற்றில் தடுப்பாய்த் தொங்குகிற கோணித் திரைக்குப் பின்னால் மூலையில் ஸ்டவ்வும் பலகைப் பிறையில் அலுமினியங்களுமாய்ச் சமையலறைப் பகுதி பிரிக்கப்பட்டிருக்க, ரோகிணி முகத்தில் வேதனைச் சுழிப்போடு, பாதி குனிந்த நிலை



யில், அடுப்பை மூனேந்து பற்ற வைத்துக் கொண்டிருப்பது தெரிந்தது.

பாவி... பாவி... என்று அரற்றிற்று மனம். தூசுகூடப் படாமல் இருந்த இருப்பென்ன? இப்போது இருக்கிற இருப்பென்ன என்று துடித்துப் போயிற்று. பேசாமல் இருந்தால் நினைப்பிலேயே துக்கம் சமுத்திரமாகிப் போகும் போலத் தோன்றிற்று.

''ராஜி ட்ராவல்ஸ் இப்ப பம்பாயிலேயும் கொடிகட்டிப் பறக்கிறது ரோகிணி... அப்பா டில்லியைப் பார்த்துக்கறார். அண்ணு பாம்பே... நான் மறுபடியும் மெட்ராஸை எடுத்துக்கறேன்னு வந்துட்டேன்..அம்மாவும் கூடத்தான்... என்ன இருந்தாலும் அலைப் முன்ன மாதிரி ஜாலியா இல்ல... உங்கூட கோன் ஐஸ்கிரீம் சாப்பிடறதுக்கு காரைப் போட்டுக்கிட்டு பாரிஸுக்குக் குதியும், கும்மாளமுமாய்ப் போனதெல்லாம் ஞாபகத்துல வந்துஅப்பப்பத் தொந்தரவு பண்ணும். நெறையப் பேசணும்... நீ சொல்லு உங் கதையை .... காலேஜ் படிப்பை முடிச்சியா இல்ல என்னைப் போல பாதில நின்னு-போச்சா ''

ரோகிணி பாலை அடுப்பில் ஏற்றிவிட்டு மெதுவாய்த் திரும்பிப் பார்த்துப் புன்னகைத்தாள்.

''படிப்பு என்னத்துக்கு ஆகும்... நிறுத்திட்டேன்....''

''வீட்ல கலாட்டா?''

''நெறைய... கார் வச்சு அந்தஸ்தை வெளியில காட்டற அப்பாவுக்கு ஒரு டிரைவர் மாப்பிள்ளையா வரது வேப்பங் காயா இருந்தது. பின் முதுகில பெல்ட் பக்கிள் கிழிச்ச காயம் வடுவாத் தெரியுது.. பார்க்கிறியா? அம்மா இருந்தா என் பக்கம் இருந்திருப்பாங்களோ என்னமோ? நான் தியாகுவைக் கல்யாணம் பண்ணிக்கணும்னு வாய் திறந்ததால வந்த ஒரே வினை அவருக்கு மறுநாளே சீட்டுக் கிழிஞ்சதுதான்... அதே கையோட எனக்கு வேற எடத்துல ஒரு பையனைப் பார்த்து நிச்சயம் பண்ணிட்டா நான் தியாகுவை மறந்திடுவேன்னு ஒரு சராசரி அப்பா மாதிரி எங்கப்பாவுக்கும் நம்பிக்கை. எனக்காக என்ன வேணு செய்வேங்கற ஒருத்தருக்காக நான் செய்ய வேண்டியது என்னவோ, அதான் நானும் செஞ்சேன்... பேசாமப் புறப்பட்டு அவரோட வந்து வாழ ஆரம்பிச்சுட்டேன்... கோயில்ல மாலை மாத்திக்கிட்டோம்.''

பேசிக்கொண்டே ரோகிணி காஃபி கலந்து நீட்டினுள்.

''இப்ப தியாகு என்ன செய்யறாரு?''

''ராணி மெட்டல் ஒர்க்ஸ்னு ஒரு ஒர்க்ஷாப்ல வேலை. போய்க்கிட்டிருக்காரு...''

''சௌகரியமா இருக்கியா?''

''சந்தோஷமா இருக்கேன்.''

''அதுக்கில்ல ரோகிணி... நீ ஏதொண்ணுக்கும் கஷ்டப்பட்டதில்லையே... சமை

---

# குழந்தைகள் பாடு கும்மாளம்தான்!



மோதிரத்தின் உள்புறம் லத்தீன் மொழியில் ஒரு வாசகம் இருக்கிறது. அதை யாரேனும் படித்தால் போதும், வில்பை ஒரு நாயாக மாறிவிடுவான்! மந்திர மாயமோ ரிஷியின் சாபமோ எப்படியானுல் என்ன? இத்தகைய ஒரு கற்பனை வால்ட் டிஸ்னி திரைப் படத்துக்கு வைர மோதிரமாய்ப் பொருந்தி டால் அடிக்காதா!

போதாக் குறைக்கு அடிக்கடி சடை நாயாக மாறிவிடும் வில்பை தேர்தலுக்குவேறுநிற்கிறுன்! நல்லவனுக வேடம் போடும் ஓர் அரசு அதிகாரியை எதிர்த்துப் போராடுகிறுன். சிரிப்பான சம்பவங்கள் அடுக்கடுக்காய் வர, குழந்தைகள் பாடு மட்டுமென்ன,பெரியவர்கள் பாடும் கும்மாளம்தான்!

தேர்தல் பிரசாரத்திடையே வில்பை திடீரென்று நாயாக மாறுவதும், மோதிரத்தை அவன் தேடிச் சென்று சந்திக்கும் இடர்ப்பாடுகளும் சிரிப்பலைகளைப் பொங்கச் செய்கின்றன, THE SHAGGY DA திரைப் படத்தில். கடைசியில் வஞ்சகனுன அதிகாரி அகப்பட்டுக் கொள்ள, வில்பைக்குத்தேர்தலில் அமோக வெற்றி; வால்ட் டிஸ்னி நிறுவனத்துக்கும் தான்!

டி.எம்.ஆர்.

யல்லு ஒரு பாத்திரத்தைத் தொட்டதில்லையே... தரையில் உட்கார்ந்து சாப்பிட்டதில்லையே... பத்தடிகூட நடந்து பழக்கமில்லையே... எப்படி உன்னால அட்ஜஸ்ட் பண்ணிக்க முடிஞ்சுது?''

ஆரம்பத்தில் கஷ்டமாய்த்தான் இருந்தது!

ஆனால் அவன் உப்பாய், சப்பாய் சமைத்ததெல்லாம் குறை பேசாமல் சிரித்துக் கொண்டே இவாகு சாப்பிட்டுப் போன பின், வாயில் குச்சி வைத்து அவன் சமைத்ததையே உள்ளே தள்ளுகையில் கண்களில் பொங்கிய கண்ணீரை அடக்கி, அடக்கி ரத்தத்தில் உப்பேறிப் போயிற்று. அறுநூறு வாங்கிய கைகள் இருநூறு ஏந்துகையில் கூட, அதில் அவளுக்குப் பிடிக்குமே யென்று மல்லிகையும், மல்கோவாவும் கொண்டு வந்த அவனது பரிவில் மனசு நெகிழ்ந்து போயிற்று. கூடவே உடம்பு நெகிழ்ந்து போனதில்தான் பிரச்னை ஆரம்பித்து.

'இந்தச் சமயத்தில் நல்ல ஊட்டமான சாப்பாடு சாப்பிடணும்... உடம்பு ஏரே அனிமிக்கா இருக்கு...மருந்து எழுதிக் கொடுத்தா சாப்பிடுவீங்களா....'

'எழுதிக் கொடுங்க டாக்டர்...'

"வீம்புக்காக வாங்கறேன்னு பாத்தேன் ராஜி... ஆறுலேர்ந்து ரெண்டு வரைக்கும் ஒரு ஷிஃப்ட். அப்புறம் ஓவர்டைமுக்குன்னு இன்னொரு ஷிஃப்ட்... இப்படிக் கஷ்டப்பட்டார்டி... நான் என்ன பெரிசா அட்ஜஸ்ட் பண்றேன்.... அம்மா...'' வயிற்றில் சட்டென்று இழுப்பு ஓடிற்று. சுவரில் சாய்ந்தாள். காலை நீட்டிக் கொண்டதில் ஒலைப்பாய் முறமுறத்தது. பாயில் அங்கங்கே பின்னல், அவள் நெற்றிச் சாந்து மாதிரி கலைந்து விளிம்பு சிதைந்திருந்தது.

''என்ன ரோஹிணி.... '' பதறி வந்தது ராஜியின் குரல்.

''ஒண்ணுமில்ல. வயித்தில அப்பப்ப வலி எடுக்குது. டாக்டர் கிட்டப் போகணும்... ஒண்ணாந் தேதிக்குக் காத்திட்டிருக்கேன்.''

''மருந்தெல்லாம் ஒழுங்கா சாப்பிடுறியா ரோஹிணி...?''

''சம்பளம் வரட்டும்...''

''ஒரு நிமிஷம்...' டிரைவர் கிட்ட ஒரு விஷயம் சொல்லிட்டு வந்துடறேன்...''

ராஜி திரும்பி வந்து நாலு வார்த்தை பேசு முன் வாசலில் 'பீய்ங்'கென்று அழைப்பு வந்தது. ஓடிப்போய் ராஜி திரும்பி வருகையில் ரோஹிணி சுவரில் இன்னும் தளர்ந்திருந்தாள். ஒரு ஆறுதலாய் இடுப்பில் லேசாய் மேடு தட்டின வயிற்றில் என்று கை அலைந்து கொண்டிருந்தது.

ராஜி நீட்டிய பாட்டிலில் கண்ணோடிற்று. விட்டமின்களின் தேக்கம் மாத்திரைகளாய் உருண்டோடியது.

''என்ன ராஜி இது... '' கேட்கையில் லேசாய் மூச்சிரைத்தது.

''ஒரு ஃப்ரெண்ட் வாங்கிக் கொடுக்கக் கூடாதா .. இது மாத்திரமில்லே ராஜி... உனக்கு இனிமே ஆற அத்தனை மருந்துச் செலவு என்னோடதுதான்... ப்ளீஸ் வேண்டாம்னு சொல்லாதே...''

''இல்ல ராஜி... நானும் வேலைக்குப் போறேன்னப்போ அவர் என்ன சொன்னார் தெரியுமா ... உன்னை வச்சிக் காப்பாத்த எனக்கு யோக்யதை இருக்குன்னு எப்ப என்னை நம்பி நீ வந்துட்டியோ அப்புறம் நீ என்னோட பொறுப்புன்னு... இப்ப உங்கிட்ட எந்த உதவி வாங்கிட்டாலும் அவரை அவமானப்படுத்தற மாதிரி ஆயிடும் ராஜி... வேணாம் ராஜி... ப்ளீஸ்....''



தஞ்சை பெரிய கோவில் கோபுரத்தின் உச்சியில் இருக்கும் உருண்டைக்கல் ஒரே கல்லால் ஆனது என்று இவ்வளவு காலமும் சொல்லி வந்தார்கள். ஆனால் சில ஆண்டுகளுக்கு முன் இதன் கும்பாபிஷேகத்திற்காகக் கோபுரத்தைச் சுத்தம்செய்து பார்த்தபோது உருண்டைக்கல் இரண்டு அரைக்கோள வடிவக் கற்களால் அமைக்கப் பட்டிருந்தது தெரிய வந்தது. ஒன்றின்மேல் ஒன்றாக வைத்து ஒரே கல்லால் ஆனதுபோல் அவ்வளவு கச்சிதமாக அமைத்திருக்கிறார்கள், அக்கால கட்டிட வல்லுநர்கள். -ஆர்சி. சம்பத்

ராஜி பதில் பேசாமல் எழுந்தாள்.

''வரட்டுமா ரோஹிணி?''

''போகலாமே... இரேன்... கோவமா?''

''சேச்சே... இன்னொரு நாள் சாவகாசமாய் வரேன்....''

இவ்வளவு கஷ்டத்திலும் ஏதோ புஷ்பமெத்தையில் படுத்திருக்கிற உணர்வோடு பேசிய சிநேகிதியை நினைத்துப் பெருமை பொங்கிற்று ராஜிக்கு. வாசலுக்காய் நடந்தாள் அவள்.



## 20

மோகன் அகர்வால் சொன்ன நேரத்துக்கு வந்துவிட்டான். ஆஸ்பத்திரிக்குக் கட்டவேண்டிய பணத்தைக் கட்டப் போயிருந்தான். ஹரியைச் சுற்றி ஒரு சின்னக் கும்பல் இருந்தது. வார்ட் பையன்கள்... சக நோயாளிகள்... மிக நெருங்கிய பந்துக்களைப் பிரிந்து போகிற மாதிரி அவனுள் லேசான கலக்கம் ஏற்பட்டிருந்தது. காலையில் டாக்டர் வர்மாவிடமும் டாக்டர் சோப்ராவிடமும் விடைபெற்றுக் கொண்டு வந்திருந்தான்.

டாக்டர் வர்மா வழக்கமான கருணைப் புன்னகையைக் காண்பித்தார்.

''விபத்துக்குப் பிறகு முதல் முறை நீங்கள் வெளி உலகத்துக்குப் போகிறீர்கள். முதலில் கொஞ்ச நாட்கள் ஏதோ புது உலகத்துக்குப் போனமாதிரி கஷ்டமாக இருக்கும். நீங்களேதான் சுற்றுப்புறத்துக்குத் தகுந்த மாதிரி அட்ஜஸ்ட்செய்து கொள்ள வேண்டும். வேலை செய்யும் திறன் மற்றவர்களை விட உங்களுடையது குறைந்ததில்லை என்று நிரூபிக்க வேண்டும்.''

ஹரி சிரித்தான்.

''அந்த ஆசைதான் எனக்கும் டாக்டர்!''

''இது பரிகாசப் பேச்சல்ல மிஸ்டர் ஹரி. மனோ பலத்தாலே சாதிக்க முடியாததே இல்லை. உங்க ஆபீஸ் வேலை வெறும் மேஜை வேலையாக இருந்தால் அதிலேயே நீங்கள் தொடரலாம்.''

''ஓ... இல்லை. நான் வேலையிலிருந்து ரிசைன் செய்து விட்டேன். பிழைப்புக்குச் சொந்தமா ஒரு பெட்ரோல் பங்க் வைக்கப் போறேன். எல்லா ஏற்பாடுகளையும் என் சிநேகிதன் செய்து கொடுத்திருக்கிறான்.''

''குட்'' — அவர் அவன் கையைக் குலுக்கினார். ''ஒரு கதவு மூடியிருந்தாலும் வேறு கதவுகள் திறந்திருக்கும் பார்த்தீர்களா? விஷ் யூ ஆல் தி பெஸ்ட்!''

''ரெடியா?'' என்று கேட்டுக்கொண்டே மோகன் அகர்வால் வந்தான்.

''ரெடிதான்'' என்று சொல்கையில் ஹரியின் கண்கள் சுற்றிலும் துழாவின. 'வருகிறேன்' என்று சொல்லியிருந்த சாந்தி இன்னும் வரவில்லை.

''கிளம்பலாமா ஹரி ''

மோகனுக்குநேரமாகிவிடும் என்கிற உணர்வில் அவன் சக்கர நாற்காலியை உருட்டியபடி எல்லோரையும் பார்த்துப்புன்னகைத்துக் கையசைத்துக் கிளம்பினான்.

அவனுக்குப் பழக்கமான பல முகங்கள்—அவனுடைய புதிய பிரத்தியேக உலகத்தில் பிரஜைகள் — அதிர்ஷ்டம் கெட்ட பிரஜைகள் —நம்பிக்கை என்கிற மூலதனம் மட்டுமே வேண்டியவர்கள்... இவர்களில் எத்தனை பேர்கள் தேறி முன்னுக்கு நகர்வார்கள்? அவனுள் ஒரு காருண்யம் பிரவாகமாகக் கிளம்பி நெஞ்சை அடைத்துக் கண்களில் திரை கட்டிற்று. டாக்டர் வர்மா சொன்ன மாதிரி இவர்கள் எல்லாருக்கும் ஒரு கதவு அடைபட்டதால் வேறு கதவுகள் இல்லாமல் இல்லை. நம்பிக்கையுடன் நகர்ந்தால் அவை திறக்காமல் போகாது... கட்டிலில் படுத்த நிலையில் மித்தல் புன்னகையுடன் விடை கொடுத்தார்.

அவன் பொதுவாக எல்லோருக்கும் கை அசைத்துவிட்டு நகர்ந்தான். அவனுடைய கால்களுக்கான காலிப்பரும் ஊன்று கட்டைகளும் அகர்வாலுடன் சென்றன.

சாந்தி இன்னும் ஏன் வரவில்லை என்று அவனுள் குறுகுறுத்தது.

நைட் டியூட்டிக்காக ஊர்மிளா வந்து கொண்டிருந்தாள்.

''கிளம்பி விட்டீர்களா விஷ் யூ ஆல் த பெஸ்ட்!'' என்றாள்.

''தாங்க்யூ. சாந்தி எங்கே ஊர்மிளா?''

''உங்களுக்கு விஷயம் தெரியாது? அவளுடைய புருஷன் வந்து அவளை அழைச்சிண்டு போயிட்டாராம்!''

அவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. சட்டென்று தன்னைச் சமாளித்துக் கொண்டு சிரித்தான்.

''ஓ! தட்ஸ் குட் நியூஸ்!''

''நோ! நானாயிருந்தா போயிருக்க மாட்டேன்!''

செய்தி நம்ப முடியாததாக இருந்தது அவனுக்கு.



ஒரு மோசமான கதையின் ஆன்ட்டி கிளைமாக்ஸ் மாதிரி இருந்தது. துச்சமாக மதித்துக் கேவலமாக இதுவரை நடத்தியவன் திடீரென்று நல்லவனாகப் போய்விடுவானா? மாறி விட்டான் என்று நம்பிக் கொண்டு அவன் கூப்பிட்டவுடன் அவள் கிளம்பிப் போயிருந்தால் அதற்கு என்ன அர்த்தம்? மோகனின் உதவியுடன் காரில் உட்காரும்போது அவளுக்குப் பெரிதாகச் சிரிக்க வேண்டும்போல் இருந்தது. இந்த விசித்திரமான உலகத்தை அவன் இன்னும் புரிந்து கொள்ளவில்லை என்று தோன்றிற்று. வேர்களைப் பரப்பிவிட்ட பிறகு அதைக் கிளப்பிக் கொண்டு வெளியில் வருவது அசாத்தியமான காரியமென்று ஏன் புரியவில்லை? தெரிந்த பாதை—அது கல்லாக, முள்ளாக, சகதியாக இருந்தாலும், தெரியாத, புதிய பாதையைத் தேடிக் கண்டுபிடிக்க எல்லோருக்கும் சோம்பல் அல்லது பயம். சாந்தியை நினைக்கையில் பரிதாபமாக இருந்தது. மன்னிப்பு, கருணை என்கிற வார்த்தைகளில் அகப்பட்டுக் கொண்டு நடராஜனின் சுயநலத்துக்கு இணங்கினாளானால் அவளுக்கு விமோசனமே யில்லை என்று தோன்றிற்று.

வீடு வந்து விட்டது. மோகன் அகர்வால் ஹரியின் உதவிக்காக ஒரு நேபாளச் சிறுவனைத் தேடிப் பிடித்து அமர்த்தி யிருந்தான். சக்கர நாற்காலி ஒன்று வாசலிலேயே காத்திருந்தது. ஹரியின் சௌகரியத்தை யோசித்துப் பார்த்துப் பார்த்து மோகன் வீட்டைச் சீராக்கி யிருந்தான். அறைக்குள் நுழைந்ததும் சட்டென்று கண்களில் நீர் நிறைந்தது. பழசெல்லாம் குபீரென்று கிளம்பி மனத்தை அழுத்திற்று. மாயாவின் புகைப்படம் கட்டிலின் வலப் பக்கம் மேஜைமேல் முன்பு அவள் வைத்திருந்த மாதிரியே இருந்தது. அவள் அவசரமாக நாற்காலியை நகர்த்திச்

# அந்தி நேரத்து உதயங்கள்

## வாஸந்தி

சென்று புகைப்படத்தைக் கவிழ்த்து மேஜை டிராயரில் நுழைத்தான்.

''பழைய ஞாபகங்கள் எல்லாம் எனக்குத் தேவையில்லே மோகன்!'' என்றான்.

''ஞாபகங்கள் இருந்தாத் தப்பில்லே ஹரி— அது உன்னைப் பாதிக்காதவரை...''

''நான் ஒரு ஞானி இல்லே!'' மோகன் மெல்லிய குரலில் சொன்னான்.

''மாயா மேலே உனக்கு இன்னும் கோபம் இருக்கு ஹரி! அவ நிலைமையிலே யார் இருந்தாலும் அப்படித்தான் நடந்திண்டிருப்பா. வாஸ்தவத்திலே உனக்கு இப்படி ஆனது அவளுக்குப் பெரிய அதிர்ச்சி. அப்ப இளைச்சவ பிறகு தேறவே யில்லே. அவ அப்பா தான் அவளைக் கட்டாயப்படுத்திக் கல்யாணம் செய்துக்க வெச்சு....''

''ஓ...ப்ளீஸ் மோகன்! இந்தத் தகவல் எனக்கு எந்த விதத்திலேயும் உபயோகமான இல்லே....!''

''ஸாரி... இனிமேல் அதைப் பத்திப் பேச மாட்டேன். ஒரு வாரம் ரிலாக்ஸ் பண்ணு. அடுத்த வாரத்திலேயிருந்து பெட்ரோல் பங்குக்கு வர முடியுமா?''

''ஆமாம். அடுத்த வாரம் — மோகன் நான் செஞ்சிருக்கிற ஒரே புண்ணியம், நீ எனக்குச் சிநேகிதனாகக் கிடைச்சது.''

''அரே, சோடோ யார்!'' மோகன் சென்ற பிறகு நாற்காலியில் உட்கார்ந்தபடி ஜன்னல் வழியே ஆகாயத்தைப் பார்க்கையில் அவனது தனிமை பயங்கரமாகத் தாக்கிற்று. முன்னால் விரிந்திருப்பது தெளிவில்லாத புதிய பாதை — அதில் நான் தனியாக நடை பழக வேண்டும். வேறு வழியில்லே. மாயாவுக்காக மோகன் பரிந்து பேசினதை நினைத்துச் சிரிப்பு வந்தது. அவள் நமக்காக வருத்தப்பட்டாலும் படாவிட்டாலும் நமக்கு என்ன ஆகப் போகிறது? நம்மைப் பிறகு பார்க்க வரக்கூடத் தெம்பில்லாதவள் வருத்தப்பட்டு என்ன லாபம்? எந்தவித ஊமை சமாதானங்களும் உபயோக

---

**அரண்மனையில் காவல் நிலையம்!**

தஞ்சாவூர் அரண்மனையின் உள்ளேயே தஞ்சை போலீஸ் ஸ்டேஷன் இயங்கி வருகிறது. தமிழ்நாட்டிலேயே ஒரு அரண்மனைக்குள் இயங்குகிற காவல் நிலையம் இது மட்டுமே! -ஆர்சி. சம்பத்



மற்ற பழைய ஞாபகங்களும் எனக்குத் தேவையில்லே....வாஸ்தவத்தில் அவள்தான் முதுகெலும்பில்லாதவள். நான் இல்லே...

சோற்றுக்காக அவனுக்குத் துணை இருக்க வந்திருக்கும் அந்த நேபாளச் சிறுவனைப் பார்க்கையில் அவனுக்குப் பரிதாபமாக இருந்தது. கூலிக்காக ஏற்படும் பந்தம் தான் நமக்கு இனிமேல். அதற்குத்தான் சமாதானமாகிப் போக வேண்டும். இனிமேல்....

⚫ ⚫ ⚫

**சா**ந்தி திடுக்கிட்டு நடராஜனைப் பார்த்தாள். சுரீரென்று ஒரு கோபம் எழுந்தது.

''நான் எட்டுத் தடவை வந்து கதவைத் தட்டியிருக்கேன். அடிச்சு விரட்டிட்டாங்க!''

''இப்ப ஒன்பதாவது தடவை நானே வந்து கூப்பிடறேன் வா!''

''இப்பத் திமிர்னு வந்து கூப்பிடறதுக்கு என்ன காரணம்?''

''நீ என் பெண்ஜாதி என்கிறதுதான் காரணம். நீ முதல்லே வீட்டுக்கு வா. அங்கே எல்லாம் பேசிக்கலாம். இங்கே நடு ரோட்டிலே என்ன? டாக்சி கொண்டாந்து நிறுத்தி வெச்சிருக்கேன்.''

உண்மையிலேயே வெளியில் அவன் டாக்சி நிறுத்தி வைத்திருப்பதை அவள் கவனித்தாள்.

எதற்கு இந்த அவசரம், யோசிப்பதற்குக் கூட அவகாசம் இல்லாமல்?

''இப்படியே வா, மத்ததை அப்புறம் பார்த்துக்கலாம். முதல்லே பேசணும்.''

அவன் பலவந்தமாக அவள் கையைப் பிடித்து டாக்சியில் உட்கார வைத்தான். வழி நெடுக எதுவுமே பேசாமல் புகை பிடித்தபடி ஏதோ யோசனையில் ஆழ்ந்திருந்தான். இத்தனை நாட்களாகத் தான் நடந்து கொண்ட விதத்துக்காக எந்த விளக்கமும் இல்லே. எதற்கு அழைத்துப் போகிறான்? அந்தப் பெண் போய்விட்டிருப்பாள். சமைத்துப் போட ஆள் வேண்டியிருக்கும். இவனுடைய சுபாவம் தெரிந்திருந்தும் எதை எதிர்பார்த்துக் கிளம்பி யிருக்கிறோம்?

ஏதோ ஒரு நைப்பாசை. 'முதல்லே பேசணும்' என்கிற வார்த்தைகள் தூண்டி விட்ட எதிர்பார்ப்பு — 'என்னை மன்னிச்சுக்க' என்ற வார்த்தைகள் ஏற்படுத்திய இளக்கம்— இவன் மாறியிருந்தால் இவன்தான் நமக்கு நியாயமான துணைவன் என்கிற நினைப்பின் பலவீனம். வீடு வந்து லிஃப்டில் நுழைந்து ஃப்ளாட்டுக்குப் போய்ச் சேர்கிற வரையில் அவன் வாயைத் திறக்கவில்லை. அவன் கதவைத் திறந்து கொண்டு ''வா உள்ளே'' என்றான். உள்ளே காலை வைத்ததும் சட்டென்று அவள் பின்னால் நகர்ந்தாள். முன்னறையில் அவள் உட்கார்ந்திருந்தாள். யாரோ ஒருத்தி. இவளுடைய புடவையைக் கட்டிக் கொண்டு — இவளுடைய ரவிக்கை அவளுக்குச் சின்னதாய் மார்பு பிளந்து கொண்டு வருகிற மாதிரி...

''உட்கார் சாந்தி.''

நடராஜனின் அதரங்களில் ஒரு நமுட்டுச் சிரிப்புத் தெரிந்தது. அது அந்தப் பெண்ணின் முகத்தில் பிரதிபலித்தது.




## நங்கையர் விரும்பும் நன்மலர்

அவள் தன் சீற்றத்தை அடக்கிக்கொண்டு கேட்டாள்:

''எதற்கு என்னை அழைச்சிக்கிட்டு வந்தீங்க? அவமானப்படுத்தவா?''

பெரிய ஹாஸ்யத்தைக் கேட்ட மாதிரி நடராஜன் சிரித்தான்.

''நம்மைப் பொறுத்தவரை அவமானம் என்கிற வார்த்தைக்கு அர்த்தமே இல்லே! நீ இத்தனை நாள் என்ன பண்ணேன்னு நான் கேக்கப் போறதில்லே. நான் என்ன பண்ணேன்னு நீயும் கேக்காதே.''

அவள் கெட்டுப் போனவள் என்கிற நிச்சயத்தில் அவன் பேசுவதைக் கேட்க அவளுக்கு ஆத்திரம் வந்தது. அவளைப் பேச விடாமல் அவன் ஆரம்பித்தான்.

''நேரே விஷயத்துக்கு வரேன். நான் பரிமளாவைக் கல்யாணம் செய்துக்கறதுன்னு முடிவு பண்ணியிருக்கேன். அவளும் நானும் ஒரு பிஸினஸ் ஆரம்பிக்கப் போறோம். கல்யாணம் செய்துண்டா சில சௌகர்யம் உண்டு. அதுக்கு உன்னுடைய கையெழுத்து வேணும்.''

'ஓ. இதற்குத்தான். சோழியன் குடுமி எப்படிச் சும்மா ஆடும்?' அவளுள் மிதமிஞ்சிய சீற்றம் எழுந்தது. இவனுடையநய வஞ்சகத்துக்கு வரையறையே கிடையாது என்று தோன்றிற்று.

''ராஜ், நேரமாச்சு. நான் போய் டிரெஸ் பண்ணிக்கிறேன்!''

பரிமளாவின் நடையும் பேச்சும் அருவெறுப்பைத் தந்தது. நம் நடத்தையைப் பற்றி நாக்கில் நரம்பில்லாமல் தூஷித்தவன் இந்தச் சாக்கடையுடன் எப்படி வாழ்கிறான்? இவனுடைய தரம் இது. தன் நடத்தைக்குச் சப்பைக் கட்டுக் கட்டுவதற்காகத்தான் நம்மைத் தூஷித்தான். இவர்கள் இருவரும் செய்யும் பிஸினஸ் எப்படிப்பட்டதாக இருக்கும்?

''இதப் பார், நம்ம கல்யாணமே ஒரு மிஸ்டேக். என்னுடைய லைன் வேறே—உன்னுடைய லைன் வேறே. தினம் தினம் என்னை நீ கேள்வி கேட்டுண்டு உன்னை நான் திருப்பிக் கேட்டுண்டு அந்த அசிங்கமெல்லாம் வேணாம் — நான் லெட்டர் தயாரா வெச்சிருக்கேன். நீ ஒரு சின்னக் கையெழுத்துப் போடணும். அவ்வளவுதான். அதுக்கப்புறம் நீயும் சுதந்திரமானவள். யாரோட வேணும்னாலும் இருக்கலாம்.''

அவள் ஆத்திரத்துடன் அவனைப் பார்த்தாள்.

''இப்படியே பேசிப் பேசி உலகத்தை ஏமாத்தாதீங்க. நான் அப்படிப்போகக் கூடியவள் இல்லேன்னு உங்களுக்குத் தெரியும். எந்த ஆணைப் பத்தியும் விகல்பமான எண்ணம் என் மனசிலே ஏற்பட்டதில்லே...''

அவன் கையைக் கொட்டிச் சிரித்தான்.

''ஓ, நீ மகா பதிவிரதைன்னு எனக்கு நல்லாத் தெரியும். அதுதான் இன்னிக்கு இப்படிக் காரணமில்லாம சிங்காரிச்சுக்கிட்டு வெளியிலே கிளம்பிண்டிருந்தியா?''

அவள் திடுக்கிட்டுத் தன்னைச் சமாளித்துக் கொண்டாள்.

''இன்னொருத்தர் பார்வைக்காகத்தான் சிங்காரிச்சுக்கணுமா?''

''இதைப் பார், இந்த மாதிரி பத்தினி வேஷம் போடாதே. மிஸ்டேக் இருக்குன்னு ஒப்புத்துக்கோ, இந்தப் பரிமளா மாதிரி. எனக்குப் புரியும்.''

ஓ. இவன் கோணத்தில்தான் இவனுக்குச் சிந்திக்கத் தெரியும் என்கிற ஆயாசம் அவள் மனசை அமுத்திற்று.

அவன் தன் சட்டைப் பாக்கெட்டிலிருந்து ஒரு காகிதத்தை எடுத்தான்.

''எனக்கு நேரமாச்சு — இதிலே கையெழுத்துப் போட்டுக் கொடு.''

பிரித்த நிலையில் காகிதத்தின் வாசகங்கள் தெரிந்தன.

'என் கணவர் நடராஜன், பரிமளாவை மறுமணம் செய்துகொள்ள நான் மனப்பூர்வமாய் அனுமதி அளிக்கிறேன், அவர்களது வாழ்வில் நான் இனி குறுக்கிட மாட்டேன்.'

இதற்குக் கையெழுத்திடா விட்டால் இவன் என்ன செய்வான் என்று அவள் யோசித்தாள். இவன் எதற்கும் அஞ்ச மாட்டான். அந்தப் பெண் எதிரிலேயே நம்மை நொறுக்கிப் பணிய வைப்பான். பரிமளா வந்து நின்றாள், என்னை என்ன செய்வாய் என்கிற மாதிரி. அவளுடைய புடவை — அவளுடைய ரவிக்கை, அவளுடைய காது வளையங்கள். சட்டென்று அவளுள் ஒரு வெறுப்பு படர்ந்தது. எத்தனை மானங் கெட்டவர்கள் இவர்கள்! வாஸ்தவத்தில் அவளுடைய அனுமதிக்காக அவர்கள் காத்திருக்கவில்லை என்கிற பிரக்ஞையில் அவளுக்குச் சடசடவென்று பிரமைகள் முறிந்து போயின. இந்த மாதிரி கல்யாணம், பந்தம் என்பதற்கெல்லாம் ஏதும் அர்த்தமே இல்லை என்று தோன்றிற்று. அது ஓர் அனுமதிச் சீட்டு—சீட்டு மாற்றப்பட்டால் விடுதலைப் பத்திரம்—உறவுகளின் ஆழத்தையும், அவை பரப்பும் வேர்களையும்தார்மீகஉணர்வுகளையும்நினைத்து அவள் அல்லல்பட்டது எத்தனை முட்டாள்தனம்! தன்னலத்தின் சொரூபங்களாய், சின்ன உலகத்தின் பிரதிநிதிகளாய் நிற்கும் இவர்களைப் பார்க்கையில் இந்த நடராஜ

னுக்கும் தனக்கும் எந்த ஜன்மத்திலும் பிணைப்பு ஏற்பட்டு விட முடியாது என்று தோன்றிற்று. இவன் என் கணவன் என்கிற பிரமையில் நான் இத்தனை நாட்கள் எப்படி இருந்தேன். தூ!

'நம்ம. கல்யாணம் ஒரு மிஸ்டேக்!'

அதுதான் உண்மை.

''உனக்கு ஜீவனாம்சம் எல்லாம் என்னாலே கொடுக்க முடியாது. தகராறு ஏதும் பண்ணாமே கையெழுத்துப் போடு!''

அவள் அவனைத் துச்சமாக வெறித்துப் பார்த்தாள். உன் பணத்தை நான் தொடுவேன் என்று நினைத்தாயா?

தூ!

அவள் வாயே திறக்காமல் அவன் ஓர் அந்நியன் என்கிற பாவனையோடு அவன் நீட்டிய இடத்தில் கையெழுத்திட்டாள்.

நடராஜன் லேசான ஆச்சரியத்துடன் நிற்கையில் அவள் மௌனமாக வெளியேறினாள்.

லிஃப்டுக்குள் நுழைந்து 'ஜி'யை அமுக்கு கையில் வாழ்வின் முதல் கட்டம் முடிந்து

## உலகப் புகழ் நூலகம்!

தஞ்சை சரசுவதி மகாலில் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டு முதல் உள்ள கையெழுத்துப் பிரதிகளும், ஓலைச்சுவடிகளும் பத்திரப்படுத்தி வைக்கப் பட்டிருக்கின்றன.

நம்மை ஆச்சர்யத்துக்கு உள்ளாக்கும் விஷயம் கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த குறளைப் பற்றிய சுவடிகளே!

'உலகப் புகழ் பெற்ற சரஸ்வதி மஹால்' என்ற தலைப்பின் கீழே தஞ்சாவூரில் உள்ள இந்த ஜீவ களஞ்சியத்தைப் பற்றி கி.பி. 1884-ல் ஜெர்மானியப் பேரறிஞர் டாக்டர் ஏ.சி. பர்னெல் எழுதினர். அந்தக் கட்டுரையில்,'தஞ்சாவூர் சரஸ்வதி மஹாலின்' நூல்கள் அனைத்தும் முறையாகத் தொகுக்கப்பட்டிருந்தது. இந்தப் பட்டியலை முதன்முறையாக லண்டனில் வெளியிட்டுஅதைப் பற்றி பர்னெல் பேசிய பிறகுதான் உலக அறிஞர்களின் கவனத்தைத் தமிழ் நாட்டின் ஒரு சின்னத்துண்டுப் பகுதியான தஞ்சாவூர் ஈர்த்தது. அவர்களும் வந்து, பார்த்து, மகிழ்ந்து தங்கள் நாடுகளில் தஞ்சாவூரின் புகழ் பரப்பினர்.

1949ல் இருந்து 1964ம் ஆண்டு பிற்பகுதி வரை சுமார் 130 கையெழுத்துப் பிரதிகள் இந்தத் தஞ்சாவூர் சரஸ்வதி மஹாலின் உதவியினால் தான் நூல்களாக உருமாற்றம் அடைந்தது என ஒரு செய்திக் குறிப்பு கூறுகிறது.

- புஷ்பா அசோக்குமார்



போன மாதிரி இருந்தது. எத்தனை விரயமான கட்டம் அது! நடராஜனை ஏன் நம்மால் திருப்திப்படுத்த முடியவில்லை என்று முன்பெல்லாம் குழப்பமாக இருக்கும். வாயை மூடிக்கொண்டு எத்தனை பார்த்துப் பார்த்துச் செய்தாலும் இவனுக்கு ஏன் நம்மைக் கண்டால் எரிச்சல் ஏற்படுகிறது என்று துக்கம் ஏற்படும். இப்பொழுது புரிந்தது.

'உன்னுடைய லைன் வேறே. என்னுடைய லைன் வேறே'.

அவனுடைய ரசனைகள் வேறு, பார்வை வேறு. எண்ணங்கள் வேறு. வித்தியாசமான கோணங்களில் நின்று ஏன் இணையவில்லை என்று நினைந்துக் குமைவது எத்தனை முட்டாள்தனம்!

'நீ யாரோட வேணும்னாலும் இருக்கலாம்!'

அவளுக்குச் சிரிப்பு வந்தது. அவனுடைய வார்த்தைகளை அவனே நம்புகிறானா? இவனை மாதிரி நான் நாயாய் அலைகிறேன் என்று நினைத்தானா? இத்தனை கேவலமாக நம்மை இவன் எடை போட வேண்டுமென்றால் அவன் எத்தனை கேவலமானவன்? அவளுக்கு ஆத்திரத்தில் நெஞ்சு படபடத்துக்கொண்டு வந்தது. ஓ, இவனைப் பற்றின ஞாபகங்கள், இவனால் நமக்கு ஏற்பட்ட சிறுமைகளின் நினைவுகள் எத்தனை காலத்துக்கு நம்மைத் தொடரும்?

''நீங்க தனியா இருக்கிற வரை உங்களாலே மறக்க முடியாது... அதனாலே....''

அவளுக்கு மனசு ஒரு முறை குலுங்கியது.

'நீ யாரோட வேணுமானாலும் இருக்கலாம்!'

சட்டென்று அவளுக்குப் பெரிதாகச் சிரிக்க வேண்டும் போலிருந்தது. எத்தனை தீர்மானமாகச் சொன்னாய்! உன்னை நான் ஏமாற்றப் போவதில்லை. நான் இருக்க மாட்டேன் என்று நினைத்தாயா? இருப்பேன். ஆனால் நீ நினைக்கிற எண்ணத்தினால் இல்லை...

உறவைத் தேடிக் கொண்டு நாயாய் அலைய வேண்டிய அவசியம் இல்லை. அதற்கெல்லாம் மேம்பட்ட நிலையில் மனங்கள் சங்கமிக்க முடியும். அதுதான் அர்த்தமுள்ள சங்கமம்.... அந்த மாதிரி சங்கமத்திற்கு ஏதும் சமாதானங்களோ வியாக்யானங்களோ தேவையில்லை. மனத்தில் பயங்களும் தேக்கங்களும் ஊனங்களும் இல்லாத நிலையில் எந்த வார்த்தைக்கும் பார்வைக்கும் பயப்பட வேண்டியதில்லை. இத்தனை நாட்களாக அவளை இனங் கண்டு கொள்ளத் தயங்கிய ஓர் அன்புச் சுனை — தளைகளை முறித்துக் கொண்டு கிளம்பிற்று.

சட்டென்று மனத்தில் தோன்றிய முடிவில், அது ஏற்படுத்திய நிறைவில் அவள் ஒரு ஆட்டோ ரிக்ஷாவை நிறுத்தி ஏறி உட்கார்ந்து ''ஸஃப்தர் ஜங் என்க்ளேவ்!'' என்றாள்....

ஹரி ஆகாசத்தைப் பார்த்தபடி தனக்குள் ஆழ்ந்தவனாய் அமர்ந்திருந்தான். அவள் ஓசைப்படுத்தாமல் உள்ளே நுழைந்து கதவைச் சாத்தினாள். சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்த அவன் முகம் மலர்ந்து போனதைக் கண்டு புன்னகைத்தபடி அவள் அவனை நோக்கி நடந்தாள்.

(முற்றும்)

# கோத்ரெஜ்
# நரை முடி பற்றியும்
# ஹேர் டைகள் பற்றியும்
# ஏற்படும் கவலைகள்
# அனைத்தையும் போக்குகிறது

ஹேருக்கு டை
செய்வது செயற்கை
யான தோற்றமளிக்கக்கூடும்.
ஆனால், நீங்கள் சரியான 'டை'யை
தேர்ந்தெடுத்துவிட்டால்
இயற்கையாகவே விளங்கும்.
கோத்ரெஜ் ஹேர்டை
தேர்ந்தெடுத்த பொருட்களால்
தயாரானது— நேர்த்தியாக
டை செய்கிறது. எவராலும்
வித்யாசம் காண முடியாது.

**நரை முடி 'எடுப்பான'
தோற்றத்தைத்
தருகிறது!**
'எடுப்பான' தோற்றம் அளிக்கக்
கூடும். ஆனால், தோற்றத்தில்
முதுமையையும் எடுத்துக்காட்டும்.
உங்கள் நண்பரையே கேட்டுப்
பாருங்கள்.

**முடிக்கு டை
செய்யும் தொல்லையை
எவர் விரும்புவர்?**
ஒருவரும் விரும்பமாட்டார்.
அதனால்தான், கோத்ரெஜ்
வழங்குகிறது தானாகவே பரவும்
ஒரு ஹேர் டை. இனி நீங்கள்
'முடியை பகுதிகளாகப் பிரித்து
சாயம் பூசும்' தொல்லைக்கு
உள்ளாக வேண்டாம். இந்த டை
உபயோகித்து, நுரை வரச்செய்து,
சிறிது காத்திருந்து, கழுவி
விடுங்கள். ஆஹா...
எவ்வளவு சுலபம்.

**ஹேர் டை உபயோகிப்பதினால்
முடி பாதிக்கப்படுமா?**
ஆம், பழைய முறையில் செய்யப்
பட்ட சாயங்கள் பாதிக்கலாம்.
அதனால்தான், கோத்ரெஜ்
அலாதியான ஹேர் டை
தயாரித்தளிக்கின்றனர். இதில்
'ஹேர் கண்டிஷனர்' சேர்க்கப்
பட்டிருப்பதால் உங்கள் முடிக்கு
இளமை தோற்றத்தை அளிக்கிறது.




# கோத்ரெஜ் பர்மனென்ட் ஹேர் டை

**ஹேர் டை செய்வதிலுள்ள தொல்லையைப் போக்குகிறது;
தோற்றத்தில் இளமை பூரிக்க வைக்கிறது.**

2 வண்ணங்களில்: இயற்கையான கறுப்பு, கரும் பழுப்பு. 20 மி.லி. மற்றும் 40 மி.லி.

CASGS-154-204 TAM

பல ஸ்டில்கள் ஒரு ஸ்டோரி!

# எழுப்பாதே தம்பி எழுப்பாதே!

எகிப்தில் அரசாங்கக் காரியாலயங்களில் தூங்குகிறவர்களுக்குக் கடுமையான தண்டனை விதிக்கப்படும் என்று புதிய சட்டம் பிறப்பிக்கப் பட்டுள்ளது. அத்தகைய சட்டம் இங்கும் வந்தால்....?



''ஆபீஸுக்குப் போனேனா? மலையா பைல் குவிஞ்சிருந்தது. பார்த்ததுமே போரடிச்சுது.''



''கேக்கணுமா? ஆனந்தமா தூக்கம் வந்தது!''



''திடீர்னு ஒரு அதிர்ச்சி! முழிச்சுப் பார்த்தா...''



''ஒரு கனவு; கனவிலே யார் வருவாங்க? பெண்ணு தான்! டான்ஸ் தான்! ஜெயமாலினி தான்!''



''படுபாவிப் பய மேலதிகாரி நரசிம்மா அவதாரமா நிக்கறான்!''

"''புதிய சட்டம் தெரியாதா? இதோ போலீ ஸுக்குப் போன் பண்றேன்'னுன்!''



''அடுத்த பத்தாவது நிமிஷம் என் கையில விலங்கு! இழுத்துண்டு போறுர் போலீஸ்காரர்!''





''கெஞ்சிப் பார்த்தேன், ஒண்ணும் நடக்கலே...''

''போலீஸ் ஸ்டேஷன்லே இன்ஸ்பெக்டர் முன்னுடி கொண்டுநிறுத்திஞ, அங்கே...''





''பலமான குறட்டைச் சத்தம்! இன்ஸ்பெக்டர் நல்லா தூங்கறுரு!''



''சொல்லணுமா? எனக்கு விடுதலை தான்!''

---

நடிப்பு: ஒய்.ஜி. மகேந்திரா புகைப்படங்கள்: யோகா தயாரிப்பு: சலன்



# ஒரு மனைவி, ஓராயிரம் சந்தேகம்

ஜெ.எஸ்.ராகவன்

அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு—இந்த நான்கு குணங்கள் கூடக் குறைவாக இருந்தாலும், சந்தேகம் என்கிற பெண்களின் ஐந்தாவது குணம் புஷ்பாவிடம் எக்கச்சக்கம்.

கணவன் – மனைவி சமாசாரம். கேட்கவோ ஒட்டுக் கேட்கவோ சுவாரஸ்யமாக இருக்கும். இப்போ புஷ்பாவின் புருஷன் கண்ணனே மூக்கால் அழப் போகிறார். கேளுங்களேன்! ''அட.... சும்மா வாங்க கண்ணன்! டாய்! சின்னப் பசங்களெல்லாம் அன்னண்டை போங்க!''

''சார்! நான்தான் கண்ணன். கொஞ்சம் மனசை விட்டுப் பேசணும். நல்லவேளே! புஷ்பா பக்கத்தில் இல்லே. உங்கள் வீட்டில் எல்லாம் எப்படியோ? தெரியாது. ஆனா கட்டாயம் 'வாசப்படி' இருக்கும். இருந்தாலும் இந்த புஷ்பா இருக்காளே...

''வீட்டிலே நான் தபாலே எதிர்பார்த்துண்டு இருந்தால் சந்தேகம். 'போஸ்ட்'னு குரல் கேட்டால் துள்ளாத உள்ளங்கள் உண்டா சார்? ஆனால் நான் துள்ளி ஓடக் கூடாது. ஏதோ சுகாசினியும் ஜீனத்தும் எனக்கு டெய்லி லவ் லெட்டர் எழுதிப் போடறாப் போல நினைப்பு அவளுக்கு. இன்னொண்ணு. இது ரொம்ப முக்கியம். எங்க ஏரியாவுக்கு லேடி போஸ்ட்வுமன்! இன்னும் டெலிவரியை ஆரம்பிக்காதவங்க. அன்மாரிட், ஸார்! புஷ்பா நான் லெட்டர் வாங்க விடுவாளா!

''வீட்டிலே போன் கொடுத்திருக்காங்க சார். எல்லோருக்கும் அடிக்கடி ராங் நம்பர் வரது சகஜம்தானே? அன்னிக்குப் பாருங்க மணி அடிச்சது. ''ஹலோ''ன்னேன். பக்கத்திலே புஷ்பா – பாம்புச் செவியோட. கையிலே பூந்தொடப்பம்.

''கண்ணன் இருக்காருன்னு'' குல்ஃபி குரல் கேட்டது. ''எஸ்''ன்னேன். ''நான்தான் நித்யகலா பேசறேன். நேத்து ஏன் வரலேன்னு '' குரல் கேட்டது. எனக்கு ஒரே உதறல். நித்யமா எனக்கு சத்ய கலாவை... சீச்சி! வாய் குழறுது. சத்யமா எனக்கு நித்ய கலாவைத் தெரியாது. ''உங்களுக்கு எந்தக் கண்ணன் வேணும்னு கேட்டேன்'' நடுங்கிண்டே. ''சாரி, ராங் நம்பர்னு'' சொல்லிட்டு அந்தப் பொண்ணு டக்னு போனை வெச்சிடுத்து.

''எதிர் முனைக் குரல் அவள் காதில் கொர கொரன்னு விழுந்திருக்கணும். உடும்புமாதிரி புடிச்சிக்கிட்டா சார். கையிலே துடைப்பம் வேறே. வார்த்தைகளைப் பெருக்கிக் கொண்டே போனள். ஒரு மாசமா இந்தச் சண்டை ஓடிண்டு இருக்கு!

''அட, இந்தத்தூர்தர்சனெடுத்துக்கோங்க சார். அது வந்து யார் எந்த சுகத்தைக் கண்டாங்களோ எனக்குத் தெரியாது. ஆனா நான் பட்ட அவஸ்தை! அன்னிக்கு ஆபீஸ் லேந்து வந்து ட.வி. ரூம்லே சட்டை பாண்டைக் கழட்டிவிட்டு, ஜெட்டி – பனியனுடன் விசிலடித்துக் கொண்டே ஹேங்கரைத் தேடிக் கொண்டிருந்தேன்.

''உள்ளே வந்தாள் புஷ்பா. ''சீ வெக்கமா—இல்லையா''ன்னு. ''என்னடி, நீ என் பெண்டாட்டிதானே. வேறு யார் இருக்

காங்க இங்கே''ன்னேன். என்னைத் துச்சமாப் பார்த்துட்டு, ''சே! என்ன மனுஷன் நீங்க! டீ.வியிலேந்து குனோலப்பியிலே ஒரு பொண்ணு பார்த்திண்டு இருக்கும்போது அப்பீஜ இருக்கீங்களே''ன்னு. சட்னு லுங்கியைச் சுத்திண்டேன், டீ.வி.க்கு முதுகைக் காட்டிக் கொண்டு. இரண்டு நாளா அவ பேசலே சார். டீ.வியையும் ஆன் செய்யலே. என்ன கூத்து போங்க, சார்.

''அன்னிக்கு பாருங்க ஸார், எங்க ஆபீஸ் நாராயணன், ''டேய் கண்ணு, நாங்க மகாபாரதத்திலேயிருந்து செலமுக்கிய சீன்களை ஆண்டு விழாவுக்கு நாடகமாகப் போடப் போறோம். நீ நடிக்கிறயான்னு கேட்டான். எனக்குப் புல்லரிச்சுது.

தலையிலே கிரீடம், காதிலே குண்டலம். மார்லே கிழங்கு கிழங்கா அட்டிகைகள். இடுப்பிலே பீதாம்பரம். காலிலே, மழையிலே ஊறினது போல் முனை வான் நோக்கி வளைந்த செருப்புக்கள் போட்டுக் கொண்டு. ''ஹ ஹ ஹான்னு'' அடித் தொண்டையிலிருந்து அடிக்கடி சிரித்து. ''முனிபுங்கவரே, யாம் புத்திர காமேஷ்டி வேள்வி செய்ய நினைத்துள்ளோம். ஆசீர்வதிக்க வேண்டுகிறேன்'' மாதிரியான 'கடாமுடா' டயலாக் பேசி நடிக்கணும்னு ரொம்ப நாளா எனக்கு ஆசை. ''என்ன வேஷம்''னு கேட்டேன்.

''துச்சாதனன்''னு சொல்லிட்டான் பட்டுனு பாவிப் பய! எனக்கு சப்த நாடியும் ஒடுங்கி விட்டது. 'அந்த'க் காட்சி, 'அந்த'க் காட்சி உண்டான்னு கேட்டேன். 'உண்டு! உண்டு!! உண்டு!!!... துகிலுரியும் காட்சி இல்லாத மகாபாரத நாடகமா'ன்னு கொக்கரித்தான். ''நன்றாக நடிப்பவருக்கு முதல் பரிசு துகிலுரித்துப் போடப் பட்ட ஏழெட்டு ஆஃப் டெரின் மற்றும் உல்லி உல்லி புடவைகள். இரண்டாவது பரிசு எவர் சில்வர் காரியரு''ன்னு கிராண்டா அறிவிப்புச் செய்தான்.

''இந்த மாதிரிப் பெண்டாட்டிக் காரன் துச்சாதனன் வேஷம் போட முடியுமா? ''வேற ஏதானும் வேஷம் கொடேன்''னேன். ''சாரி''ன்னுன் நாராயணன். ''பயப்படாதே, ஒத்துக்கொள்''னு குரல் கேட்டது. யாருன்னு பார்த்தேன். சுற்று முற்றும். யாருமில்லே. உள் மனம்தான். ''பொய் சொல். நாடகம் அன்னிக்கு அவள் ப்ரெண்டுக்குக் கல்யாணம், வரமாட்டா. நீ போடப் போறது துச்சாதனன் வேஷம்தானே அரிச்சந்திரன் இல்லேயே! தாராளமாகப் பொய் சொல்.'' என்று மேலும் சொன்னது.

''துணிந்து விட்டேன். துணிவுடன் திரௌபதியின் துணிகளை மீட்டர் மீட்டராக இழுத்து, கண்களில் காமக் களிப்புடன் நான் அன்னிக்குச் செய்த ரோலுக்குத்தான் முதல் பரிசு. புஷ்பா செய்து வந்த கட்டுப்பாடுகளின் பாதிப்புத்தான் அந்த அளவு கடந்த ஆர்வம்னு சைகலாஜிகலா நீங்க சொல்லலாம். திரௌபதியாய் நடித்த ஆபீஸ் ரிசப்ஷனிஸ்ட் பானுமதிக்கு சாரி சொல்லிட்டு வீட்டைப் பற்றிய நினைவு வந்த போதுதான் தரைக்கு வந்தேன். மகாபாரத நாடகத்திலிருந்து வரும் நடிகன் கிரீடப்புடனும், சாரிகளுடனும் வந்தால் என்ன அர்த்தம்? சட்டுன்னு கர்ணனிடம் ஓடினேன்.

''வீட்டுக்கு வந்தபோது ஆரத்தியும் கையுமாக இருந்தாள் புஷ்பா. 'என்ன வேஷம்'னு. ''கர்ணன்தான்''னு புளுகினேன். ''இந்தக் கவசத்தைப் பார்த்தாத் தெரியலேயா ''ன்னேன். கர்ணனிடமிருந்து வாங்கிண்டது. கேட்டபோது தட்டாமல் கொடுத்தான். ''ஆமா? இது என்ன பளபளன்னுடிபன் காரியர்''னு. ''ஆமா, பரிசு''ன்னேன். கர்ணனிடம் மாற்றிக் கொண்டேன். அவனுக்கு இரண்டாவது பரிசு.

''திருஷ்டி பட்டுடப் போறது. நாளையிலேந்து இதிலே உங்களுக்குச் சாப்பாடு அனுப்பட்டுமா? நாடகப் பாத்திரம் அளித்த பாத்திரமாச்சே''ன்னு.

''நாக்கிலே அப்ப எனக்குச் சனி. அனுப்பேன். எதிர் வீட்டிலே சாப்பாடு எடுக்கிறாளே அன்னம்மா அவளையே ஏற்பாடு செய்யேன்''னேன். கிரீடத்தையும் விக்கையும் கழற்றி விட்டு.

''போச்சு! அப்புறம் என்ன, இடி, வெடி, ரகளைதான்! அன்னம்மாங்கிற பேரைக் கேட்டால் உங்களுக்குக் கற்பனையில் வரும் உருவம் வேறே. இந்த அன்னம்மாவுக்கு வயசு இருபது. 'வின்'னுன்னு 'பாடக்'லேந்து திமிரோட வரும் ரேஸ் குதிரை மாதிரி இருப்பா. ''அப்படியா விஷயம் ''னு புஷ்பா காரியரை மடால்னு போட்டா. ஆமா... சார்... மண்டையில ஏற்படற வீக்கம் லேசிலே போகாதா சார்?''

டாக்டர்: ''ரெண்டு காதுகளிலும் ஒரு கோளாறும் இல்லேயே அம்மா? நல்லாத்தானே இருக்கு...?''

''அப்படி ஒரு சர்ட்டிபிகேட் எழுதிக் கொடுத்துடுங்க டாக்டர் தயவுசெய்து...''

''நல்லாக் கேட்கிற காதுகளுக்கு எதுக்கும்மா சர்ட்டிபிகேட்டு...?''

''என் மாமியார் சொல்றதுக் கெல்லாம் ஒண்ணுமே பதில் பேசாம அலட்சியமா இருக்கிறதைப் பார்த்து...எனக்குக் காது செவிடா இருக்குமோன்னு வீட்டுல எல்லோரும் சந்தேகப் படறாங்க அதுக்குத்தான்!'' -பெ. கஸ்தசாமி

அன்று பார்க்காததை யெல்லாம் இன்று சேர்த்து வைத்துப் பார்த்தான். பார்க்க ஆசைப்பட்டான், ஞானு.

"நான் ஒரு முண்டம்... சுகன்யா எங் கூடப் பேச வந்தப்ப எல்லாம் அவளோட மனசைப் புரிஞ்சுக்காம நான் பாட்டுக்கு மந்திரம் சொல்லிண்டு இருந்துட்டேன். அவ ஆசை ஆசையாப் பிள்ளையாருக்கு மாலை தொடுத்து எங்கிட்டக் கொடுக்க வந்தப்ப எல்லாம் கூடையிலே வெச்சுடுன்னு எத்தனையோ தடவை சொல்லி இருக்கேன். நடேச சாஸ்திரிகளுக்கு இப்படி ஓர் எண்ணமா? இதை ஏன் என்கிட்டே முதல்லயே சொல்லலே? ஒருவேளை காலம் வரப்போ சொல்லிக்கலாம்னு இருந்திருப்பார். இப்பத்தான் நேக்கே நல்ல காலம் வந்திருக்கு. அதான் குழந்தைவேல் என்கிட்டே எல்லாத்தையும் சொல்லிட்டார்.

டொனேஷன் வசூல் பண்ணுவதை எல்லாம் நிறுத்திவிட்டு இப்போதே சுகன்யாவிடம் போய்ப் பேச வேண்டும்போல் தோன்றியது, ஞானுவுக்கு. சுகன்யாவைப் பார்க்க வேண்டும் போலத் தோன்றியது.

சுகன்யாவும் என்னை விரும்புகிறாளா? இந்த உச்சிக் குடுமியையும், காதுக் கடுக்கனையும் அவள் நேசிக்கிறாளா?

திடீரென்று தன் உடம்பு முழுவதுமாய்ப் புத்துணர்வு பரவுவதை உணர்ந்தான் ஞானு!

அதன் பிறகு—

'ஆண்டாள், மாமயன், மாதவன், வைகுந்தனுக்கு மாலை தொடுத்தாள். நீ யாருக்காகத் தொடுக்கிறாய்? எனக்குத்தானே?' என்று சுகன்யாவிடம் கேட்டு அவள் கைகளால் தொடுத்த மாலையைக் கழுத்தில் போட்டுக் கொள்ள வேண்டும். இன்னும்...

மனம் பரபரக்க ஞானு வீடு • வீடாக டொனேஷன் வசூல் பண்ணிக் கொண்டிருந்தான்.

அவன் வேகமாகத் திரும்பும் வழியில்....?

செல்வி எதிர்ப்பட்டாள்.

பரிசலைக் கட்டிவிட்டு இப்போதுதான் வீடு திரும்புகிறாள் போலிருக்கிறது.

செல்வி....செல்வி..... இவளிடம் என்னவோ சொல்ல வேண்டும் என்று நினைத்தேனே... என்ன? ஆ....

செல்விக்குப் போட்டி உருவாகிக் கொண்டிருக்கிறது என்பதைச் சொல்ல வேண்டும். இக்கரைக்கும் அக்கரைக்குமாகப் பாலம் கட்டி விட்டால் இவள் பரிசல் தொழிலில் மண் விழுந்து விடும் என்பதைச் சொல்ல வேண்டும். போட்டிப் பரிசல் வேறு விட ஏற்பாடாகிக் கொண்டிருக்கிறது என்பதையும் சொல்ல வேண்டும்....

"சின்ன ஐயா சுகமா இருக்கீங்களா? பார்த்து நாளாச்சு?"

செல்வி தள்ளி நின்று பயத்துடன் மெல்லிய குரலில் கேட்டாள்.

# குமரிப் பெண்ணே! குயிலாளே!

விமலா ரமணி

சீ! நான் வந்த காரியம் என்ன? இப்போது நினைக்கிற காரியம் என்ன? இந்தச் சதுர்த்தி விழா மும்முரம் முடியட்டும்... முதலில் சுகன்யாவுக்கு ஒரு கொலுஸு வாங்கிக்கொண்டு வரவேண்டும். அன்று வாங்க மறந்துபோன கொலுசை ஞாபகமாக வாங்கிக் கொண்டு வந்து.... அந்த ....அந்த.... அழகான பாதங்களில்....

முதன் முதலில் அவன் பார்த்தது அவள் பாதங்களை....

கொலுஸு அணிந்திருந்த அழகான பாதங்களை....

அதற்குப் பரிசு வாங்கித் தருவதுதான் பொருத்தம்! அப்படியா சங்கதி? இந்த சாஸ்திரிகள் எல்லாம் பெரிய ஆள்தான்! மனத்துள் எத்தனை திட்டங்களைத் தீட்டி வைத்திருக்கிறார்! என்னிடம் ஒரு சிறு கோடு கூடக் காட்டவில்லையே! நானும் இதையெல்லாம் கண்டு கொண்டதாகவே காட்டிக் கொள்ள மாட்டேன்... ஒன்றுமே தெரியாதவன் மாதிரி இருந்து விட்டு அவர் சொல்லப் போவதை யெல்லாம் கேட்டுக் கொண்டிருந்து விட்டு 'அப்படியா' என்று கேட்க வேண்டும்.

பரபரப்புடன் தான் கேட்ட சமாசாரங்களைச் சுருக்கமாகக் கூறினான் ஞானு.

செல்வி திகைத்துப் போனாள்.

போட்டியா? அவளுக்கா? இந்தக் கிராமத்தில் பிறந்து வளர்ந்த அவளை இந்தக் கிராமத்திலேயே சமாதி கட்டிவிடப் போகிறார்களா? செல்வி உடைந்து போய் அங்கிருந்த ஒரு மண் மேட்டில் உட்கார்ந்து விட்டாள்.

தூரத்தில் ஞானு அவசரம் அவசரமாய்ப் போய்க் கொண்டிருந்தான்.

## 6

"குட்ட நாடன் புஞ்சையிலே, கொச்சுப் பெண்ணே குயிலாளே!
கொட்டு வேணம், குழல் வேணம்,
குரவை வேணம்



கருத்த புடவை வெச்சோ, அரையன்ன
கிளி போல
'குதிக்கக் குதிக்கப் பாயும் குதிரை போல!
நிரவைக்கான் ஆறு வேணம், கொடி
தோரணங்கள் வேணம்,
விஜய ஸ்ரீ வாலிதராய் வரன்னு ஞங்கள்
ஓ! திந்திந் தாதா திந்திந் தை திந்தை
தகதைதை தோம்''

—என்று பாடலைப் பாடியவாறே குமாரன் கை தட்டிக் கொண்டிருந்தான். கடைசி 'தோமை' கொஞ்சம் அழுத்தம் கொடுத்து 'தோம்' என்ற போது அது 'ஓம்' என்பது போல் ஒலித்தது.

அந்தப் பரிசலில் இருந்த அனைவரும் அவன் பாடலுக்குத் தகுந்தபடி தாளம் போட ஆரம்பித்தனர். செல்வி இதை யெல்லாம் மகிழ்ச்சியுடன் பார்த்தபடி பரிசலை ஓட்டிக்கொண்டிருந்தாள்.

அவள் வாய் தன்னையுமறியாமல் "ஓ! தித்தித் தாதா தித்தித் தை தித்தை தகதை தை தோம்" என்று பாடியபடி இருந்தது.

சுகுமாரன் நாயர் இங்கு வந்ததிலிருந்து இக்கரைக்கும் அக்கரைக்கும் பரிசலில் போக ஆரம்பித்ததிலிருந்து எப்போது பார்த்தாலும் பாட்டுத்தான்: சந்தோஷங்களின் தாளங்கள்தான்!

செல்விக்குச் சுருக்குப் பை நிரம்பக் காசு தான்!

"என்டே கேரளத்திலே ஈ வஞ்சிப் பாட்டு கொறையக் கூடி விசேஷம் உண்டான கானமாக்கும். ஈ ஆற்றைக் கடக்கும்போழ் எனிக்கு என்டே கொச்சு கேரளம் மனோ முகரத்தில் இப்போழ் ஞாபகம் வந்து! ஈ ஆற்றிலே வள்ளங்கழி வச்சால் எத்தர சுந்தரமாயிரிக்கும்!" என்பான் நாயர்.

நாயர் இப்போது அநேகமாக இந்தக் கிராமவாசியாகி விட்டான். பாதி நாள் ஊருக்கு வருவதும், மீதி நாள் அக்கரை போவதுமாக இருக்கிறான்! ஒவ்வொரு தடவையும், நாயரை இக்கரைக்கோ, அக்கரைக்கோ செல்வி கொண்டு விடும்போது நாயர் தவறாமல் இந்தப் பாட்டைப் பாடுவான். கூட இருப்பவர்களும்தாளம் போட்டபடி பாடுவார்கள். நாயர் சும்மா இருக்க மாட்டான். செல்வியையும் சீண்டுவான்.

"எந்தா கொச்சு மிடுக்கி! எனக்கு அல்பம் வேகம் போணம். நீ ஈ பாட்டினோடொத்த துழைஞ்சால் நமக்கெ வேகம் கரை எத்தாம். ஈ யௌவனத்தின்டெ மாதுரியில் நினக்கு எந்தா ஒரு மௌனம்! என்னோடு பற. ஈ குட்ட நாடன் நாயர் நின்டே மௌனத்தினே ஒரு நிவிர்த்தி உண்டாக்காம். உம்.... பாடே..." என்று அதிகாரம் பண்ணுவான்.

முதலில் அவன் மலையாளம் புரியவில்லை. வர வர நாயரும் தமிழும், மலையாளமும் கலந்து பேச ஆரம்பித்து விட்டான்! அவர்களுக்குப் புரிய வேண்டுமே!

"குயிலானே, கொச்சுப் பொண்ணே" — என்று செல்வியைப் பார்த்தபடி நாயர் கைதட்டிக் கொண்டு பாடும்போது செல்விக்கு வெட்கமாக இருக்கும்!

சதுர்த்தி உற்சவம் பிரமாதமாக நடந்து விட்டது!

பிள்ளையாருக்கு அபிஷேக ஆராதனைகள் என்ன, அலங்காரப் பந்தல் என்ன! கணபதி ஹோமம் என்ன! அன்ன தானம் என்ன! பத்து நாட்களும் லட்சார்ச்சனைகள் என்ன! —இப்படி ஏக அமர்க்களம். அந்தச் சின்னக் கிராமத்துக்கே ஒரே அதிசயம்! அக்கரையிலிருந்து இக்கரை வருகிறவர்களும், திரும்பிப் போகிறவர்களுமாய்...

செல்விக்கு ரொம்ப ரொம்ப சந்தோஷம். அவள் சுருக்குப் பை நிரம்பி வழிந்து கொண்டிருந்தது. எல்லாம் அந்தச் சின்ன ஐயா வந்த வேளை!

புதுப் புது முகங்கள்... புதுப் புது மனிதர்கள்... சின்னச் சின்னக் குழந்தைகளின் மனம் போல மனம் கொள்ளாத ஆச்சரியங்கள்... மகிழ்வின் பூரிப்புகள்... சின்ன ஐயா எவ்வளவு நல்லவர்... அன்றுகூட ஒரு கதை சொன்னாரே — தவ முனிவர் புத்தர் மயங்கி விழுந்து விட்டாராம். அவருடைய மயக்கம் தீர ஒரு தீண்டத் தகாதவன் பசும் பால் தந்து உதவினானாம். ஆனால் உயர்ந்த புத்தரைத் தொட அஞ்சியபோது புத்தர் என்ன சொன்னாராம்?—

"உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்பது செயலால்தான் ஏற்படுகிறது. பிறப்பால் அல்ல" என்றாராம் புத்தர்.

இந்தக் கதையைச் சொன்ன அந்தச் சின்ன ஐயா இன்னும் என்ன சொன்னார்?

"அத்தனை பேரையும் கரை ஏத்தறது உன் பரிசல். உன் பரிசல்லே நாங்க ஏற மாட்டோம்னு உன்னை ஒதுக்கின நாங்கதான் கரை சேர மாட்டாதவங்களாக இருப்போம். கரை ஏத்தறவன் கடவுள். இந்தப் பாவ உலகத்திலே இருந்து உயிர்களைக் கரை ஏத்தறான். நீயும் எங்களை எல்லாம் இக்கரைக்கும் அக்கரைக்கும் கரை ஏத்தறே... நீயும் கடவுளுக்குச் சமமானவள்... உன்னை நீயே வீணாத் தாழ்த்திக்காதே!"

சின்ன ஐயா நல்லவர். உள்ளத்தாலேயும் செயலாலேயும் உயர்ந்தவர்!

ஊரே ஒதுக்கின அவளுடன் அவர் சகஜமாகப் பழகினார். அது மட்டுமல்ல. அவளிடமிருந்த தாழ்வு மனப் பான்மையைக் கொஞ்சம் கொஞ்சமாக அகற்றினார். இப்போதெல்லாம் செல்வி முந்தி மாதிரி அவ்வளவு தாழ்த்திக் கைகளை நீட்டிக் காசு வாங்கிக் கொள்வதில்லை.

"நான் உழைக்கிறேன். உழைப்பின் ஊதியத்தைப் பெற்றுக் கொள்கிறேன். ஒவ்வொருவர் உழைப்பும் ஒவ்வொரு விதத்தில் உயர்ந்தது" என்கிற மனோபாவம் மெல்ல மெல்ல அவளுள் வளர ஆரம்பித்தது. அதுவும் இந்தச் சுகுமாரன் நாயர் வந்த

---

லாட்ஜ் மானேஜர்: "இரண்டு மாத வாடகைப் பாக்கியை எப்போது தான் தருவீங்க?"

கைரேகை பார்ப்பவர்: "உங்க கையை நீட்டுங்க... ரேகையைப் பார்த்துச் சொல்றேன்... எப்போ உங்களுக்கு வாடகைப் பாக்கி வசூலாகும்னு!" - உ. ராஜாஜி



## உங்கள் குழந்தை வாழ்க்கை எனும் வான வீதியில் சுகமாகப் பறக்க ஏற்பாடு செய்யுங்கள்!

### இன்றே ஒரு எல்ஐஸி பாலிசி மூலம் அந்த எதிர்காலத்திற்குத் திட்டமிடுங்கள்.

உங்கள் குழந்தையின் பாதுகாப்பான எதிர்காலத்திற்கு இன்றைய தினம் அடித்தளமாக அமையட்டும். மேற்படிப்பு, வாழ்க்கையைத் துவங்குதல், திருமணம் போன்ற பலவித தேவைகளைப் பூர்த்தி செய்ய எல்ஐஸி பாலிஸிகள் இருக்கின்றன. அத்துடன், வளர்ந்து வரும் உங்கள் குடும்பத்தின் தேவைகளுக்கு ஏற்றவாறு உங்களுக்குச் சொந்தமான ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் பாதுகாப்பு அமைந்திருக்கிறதா என்பதையும் உறுதி செய்து கொள்ளுங்கள். உங்கள் எல்ஐஸி முகவரையோ அல்லது உங்களுக்கு அருகிலுள்ள எல்ஐஸி கிளை அலுவலகத்தையோ அணுகுங்கள்.



**ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பரேஷன் ஆப் இந்தியா**

**ஆயுள் இன்ஷ்யூரன்ஸிற்கு இணை எதுவுமேயில்லை.**

daCunha/LIC/121/81

பிறகு அவனுடைய தன்னம்பிக்கைகள் அதிகமாகி இருந்தன. நாயர் சிரிக்கச் சிரிக்கப் பேசுவான். கேரளத்தில் அவன் தந்தை டீக்கடை வைத்து முன்னுக்கு வந்த கதையைச் சொல்லிச் சொல்லி மகிழ்வான். மலையாளமும் தமிழும் கலந்த மணிப்பிரவாள நடையில் குமாரன் நாயர் பேசும்போது அனைவருமே பிரமிப்பார்கள்.




"நீதிபதி: "நீங்கள் உங்கள் மனைவியைக் கொலை செய்தது ஏன்?"

குற்றவாளி: "அவளிடமிருந்து விவாகரத்து பெறும் வரை எனக்குப் பொறுமையில்லை."

-கீழை. அ. கதிர்வேல்



## தஞ்சை மாரியம்மன் கோவில்!

தஞ்சை புன்னை நல்லூர் மாரியம்மன் மிகவும் பிரசித்தமானது. சக்தி வாய்ந்த அம்மன் என்று பெரும்பாலோரால் வணங்கப்பட்டு வருகிறது. ஆனால் அம்மனுக்குச் சிலை இல்லை என்பது பெரும் பகுதியினருக்குத் தெரியாது. உண்மையிலேயே இயற்கையாக வளர்ந்த புற்றின் மீது முகத்தை மட்டும் அமைத்து வழிபட்டு வருகிறார்கள். முகத்தைத் தவிர மற்ற பகுதிகள் யாவும் மண்ணினால் வளர்ந்த புற்றே ஆகும். அப்பகுதி ஆடைகளினால் அலங்கரிக்கப்படும். இந்த அம்மனுக்குத் தினந்தோறும் அபிஷேகம் நடைபெறுவதில்லை. அம்மனின் இடப்பக்கத்திலுள்ள (வெளியே) வேறொரு அம்மன் சிலைக்கே அபிஷேகம். ஆண்டிற்கு ஒரு முறை சாம்பு தைலத்தினால், அம்மனாக வணங்கப்படும் புற்றினைத் துடைத்து விடுவார்கள். மற்ற ஆராதனைகள் வழக்கம்போல் நடைபெறுகின்றன.

- அள. கலியமூர்த்தி



செல்வி பிரமித்ததில் ஆச்சரியமில்லை.

இந்தச் சதுர்த்தி ஆர்ப்பாட்டங்கள் விழாக் கோலங்கள் திரட்டும்... சின்ன ஐயாவிடம் நிதானமாகப் பேச வேண்டும்.

'என்கிட்டே இருந்த தாழ்வு மனப்பான்மையைப் போக்கினீங்க. உங்களைக் கரை ஏத்தின என்னைக் கரையேத்த உங்களால முடியுமா? சே...சே... இதென்ன நினைப்பு. அவுருகிட்டே போய் இப்படி... ஏன் என் புத்தி இப்படிப் போவுது?

எனக்குப் பொருந்தாத நெனைப்பு. அவுரு எத்தினி பெரிய மனுஷன்... எத்தினி சாஸ்திரமும் மந்திரமும் படிச்சவரு... அவருகிட்டே போய்... அதான் சுகன்யா அம்மா வீட்டுக்குள்ளே காத்துக்கிட்டு இருக்காங்களே?

'இருக்கட்டுமே. என் மனசுக்குள்ளே நான் ஆசைப்படறதை யாராலே தடுக்க முடியும்? நான் வெளியே சொன்னா வேணா இது தப்பா இருக்கலாம். மனசுக்குள்ளே நெனைக்கறது தப்பே இல்லே! நெனப்புக்குச் சாதி மதம் இல்லே... என் மனசுக்குள்ளே நான் ஒரு பொம்பளைங்கிற நினைப்பையே மொத மொதல்லே ஞாபகமூட்டினது சின்ன ஐயா தான். நான்பாட்டுக்குப் பரிசலை ஓட்டிட்டு இருந்தேன். கூலி வாங்கறது, ஒண்ணுதான் என்னோட வேலைன்னு இந்தப் பரிசல் மாதிரி ஜடமாத்தான் இருந்தேன். ஆனா ஜடத்துக்கும் உயிர் இருக்கு... உணர்ச்சி உண்டுங்கிற உண்மையைச் சின்ன ஐயா தான் காட்டிக் கொடுத்தாரு. காட்டிக் கொடுத்தவரு இப்போ காணாமலே போயிட்டாரு... பரவாயில்லே...ஒரு நாள் கட்டாயம் கிடைப்பாரு... அப்போ நான் கேள்வி கேக்கத்தான் போறேன்.

''நிம்மதியா இக்கரைக்கும் அக்கரைக்கும் மனுசங்களைக் கரை சேர்த்த என்னை இப்படி மெள்ள மெள்ள மூழ்க அடிக்கறீங்களே... இது ஞாயமா'' — அப்படீன்னு கேக்கப் போறேன்....

கடலில்தான் புயல் உருவாகும் என்பதில்லை.... இதோ செல்வி மனத்துள்ளும் மெல்ல மெல்ல ஒரு புயல் உருவாகிக் கொண்டிருக்கிறது. இதற்கு வானிலை அறிவிப்பு.. அபாய அறிவிப்பு என்கிற கட்டங்கள், கட்டாயங்கள் இல்லை... ஆனாலும் இந்தப் புயல் மையம் கொண்டிருக்கிறது. கருக் கொண்டிருக்கிறது. என்று கரையைத் தாக்குமோ? அல்லது கரையை உடைக்குமோ' அல்லது கரையைத்தான் கடக்குமோ?

யாருக்குத் தெரியும்?

செல்வி ஏதேதோ நினைவுகளில் மிதந்தாள்.

''தை தை தித் தித் தை தை தோம்''— என்கிற கீதம் மெல்ல மெல்லத் தூரத்தில் கேட்கிற பாவனையாக மனசு இலேசாகி மேலே பறக்கிறது! வான வீதி ஆற்றில் மேகப் படகுகளில் செல்வி மிதந்தபடி அந்தப் படகைச் செலுத்திக் கொண்டிருக்கிறாள்!

''தை தை தித் தித் தை தை தோம்...
தை தை தித் தித் தை தை தோம்...''

(தொடரும்)

ஒரு ஸ்டில்: ஒரு ஸ்டோரி: 4

# இருட்டுப் பறவை

ராஜேஷ்குமார்



ஹோட்டல் அன்னபூர்ணாவின் மாலை நேர நெரிசல்.

முப்பது வயதில் ஒரு இளைஞன் உட்கார்ந்திருந்தான். குனிந்தவாக்கில் தலையைக் கவிழ்த்துக் கொண்டு வலது கையின் ஆட்காட்டி விரலால் டேபிளைக் கீறிக் கொண்டிருந்த அவனுடைய முகத்தை ஏறிட்டேன். அடுத்த விநாடி—

என் இதயத்தின் ஒரு மூலையில் சின்ன சந்தோஷ விழுக்!

'அடே! இவன் கௌதம்? ராமகிருஷ்ண வித்யாலயத்தில் நான் பட்டப் படிப்பை மேற்கொண்டபோது இவனும் நானும் ஹாஸ்டலில் ஒரே அறையில் மூன்று வருஷம் குப்பை கொட்டினோமே! சரோஜா தேவி புத்தகத்திலிருந்து கீட்ஸ் புத்தகம் வரை என்னோடு சரிக்குச் சரி வாதம் பண்ணுவானே! அந்தக் கௌதம் இவன்!'

அவனுடைய தோளை உற்சாகமாகத் தட்டப் போனேன். என் மனசில் ஒரு நெருடலான தயக்கம் தோன்றிக் கொண்டது.

''கௌதம்!'' என்றேன் மெல்லிய குரலில்.

அவன் சரேலெனத் தலை நிமிர்ந்து என்னைப் பார்த்தான். சலனமில்லாத பார்வை.

''என்னடா முழிக்கிறே... தடி முண்டம்? வித்யாலயத்திலே... ஹாஸ்டல்லே... இருபத்தஞ்சாம் நெம்பர் ரூம்ல நீயும் நானும் மூணு வருஷம் இருந்தோமே...? மறந்துட்டியா....?''

அவன் உதடுகளில் — சரியாய் ஐந்தே விநாடிகளில் — ஒரு புன்னகை தோன்றி மறைந்தது. கண்களில் ஒரு உயிர்ப்பு பரவி அணைந்தது.

''நீ.... பன்னீர் செல்வம்....!'' — என்றான் கரகரப்பான குரலில்.

''அப்பாடி... இப்பவாவது என்னை அடையாளம் கண்டுகிட்டியே....! ஆமா ஏன்டா இப்படி இருக்கே...? கறுத்து, இளைச்சு, முடி வளர்ந்து.... என்னடா ஆச்சு உனக்கு?'' நான் அவனுடைய தோளைப் பற்றி உலுப்பினேன்.

கௌதம் வலுக்கட்டாயமாகச் சிரித்தான். ''எனக்கு ஒண்ணும் ஆகல்லே.... நல்லா ஹெல்த்தியா... வெல்த்தியாத்தான் இருக்கேன். முடி வளர்க்

கிறது இப்போ பேஷன்... அதான் வளர்த்திட்டிருக்கேன்... பிஸினஸ்ல அலேச்சல்... அதான் இப்படி இளைச்சுக் கறுத்துப் போய் இருக்கேன்....''

''இன்னமும் அதே 'எக்ஸ்போர்ட்' பிஸினஸ்தானா?''

''உம்'' என்றான் கௌதம்.

''பெங்களூர்லேருந்து கோயமுத்தூருக்கு எப்ப வந்தே?''

''இன்னிக்குக் காலேலதான் வந்தேன்.... பிஸினஸ் விஷயமா ஒருத்தரைப் பார்க்க வேண்டியிருந்தது. பார்த்துட்டேன். இன்னிக்கு நைட் 'ஜலண்ட்ல' பெங்களூர் போறேன்....''

''வீடு இன்னமும் அதே மைக்கோ-லே-அவுட்டில்தானே?''

''உம்...''

''ஆமா... இப்ப நீ என்ன பண்ணிட்டிருக்கே?''

நான் சிரித்தேன். ''அதை ஏன்டா கேக்கறே கௌதம்? படிச்சது பி.ஏ. எக்னாமிக்ஸ்... இப்போ நான் பார்க்கிறது மெடிகல் ரெப்ரஸென்டேட்டிவ்... பயனீர் பார்மாசூடிகல்ஸ்ல இருக்கேன். ஊர் ஊராச் சுத்தற வேலே...! இன்னும் ஒரு மூணு நாள் கோயமுத்தூர்லே இருக்கணும்...''

காப்பியைக் குடித்துவிட்டு, பில்லுக்குப் பணத்தைக் கொடுத்துவிட்டு வெளியே வந்தோம்.

''இங்கே எந்த லாட்ஜ்ல தங்கியிருக்கே செல்வம்?''

''ராஜா தியேட்டருக்குப் பக்கத்திலே இருக்கே.... 'பூர்ணிமா'.... அதுலதான்... பத்தாம் நம்பர் ரூம்ல தங்கியிருக்கேன்... வாயேன்... ரூமுக்குப் போயிட்டுப் போகலாம்...''

கௌதம் வேகமாகத் தலையை ஆட்டினான். ''நோ...நோ... எனக்கு டயமில்லே...''

இருவரும் ரத்தின விநாயகர் கோவிலேத் தாண்டிக் கொண்டிருந்தோம். நடந்து கொண்டிருந்த கௌதம் சட்டென்று நின்றான். ''செல்வம்! நாளைக்கு நீ இங்கேதானே இருப்பே?''

''ஆமா...!''

''எனக்கொரு உதவி செய்யறியா?''

''ம்... சொல்லு....!''

''இந்தா!'' — தன் கால் சட்டைப் பையிலிருந்து ஒரு பேப்பரை உருவி என்னிடம் நீட்டினான். ''செல்வம்! இந்தத் தந்தி பாரத்தை முறையாகப் பில்லப் பண்ணியிருக்கேன். பம்பாயில் இருக்கிற பார்ட்டிக்கு டெலிகிராம் தரணும். நாளைக்கு மத்தியானம் ரெண்டு மணிக்கு கோயமுத்தூர் தந்தி ஆபீஸிலிருந்து இந்த டெலிகிராமைத் தரணும்... அதை நீதான் தரணும்...!''

''ஏன்டா அப்படி? நாளைக்கு நீ பங்களூரிலிருந்தே டெலிகிராம் தரலாமே?''

கௌதமின் முகம் மாறியது. ''இதுல உனக்குத் தெரியாத ஒரு பிஸினஸ் பிராப்ளம் இருக்கு... தந்தி கோயமுத்தூர்ல இருந்து போனாத்தான் அந்த ப்ராப்ளம் சால்வாகும்!''

''சரிசரி... தந்தி இங்கிருந்து தரணும்.. அவ்வளவுதானே... தந்துடறேன்.'' நான் அலட்சியமாய்ச் சொன்னேன்.

**ம**றுநாள் மத்தியானம் சரியாய் இரண்டரை மணி.

கௌதம் பெங்களூரிலிருந்து எஸ்.டி.டி. கால் போட்டுப் பேசினான்.

''செல்வம்! டெலிகிராமைக் குடுத்துட்டியா?''

''ம்... நீ சொன்ன மாதிரியே ரெண்டு மணிக்குக் குடுத்துட்டேன்.''

''நான் கொடுத்த தந்தி பாரத்தைத் தானே உபயோகப்படுத்தினே?''

''ஆமான்டா!''

''தேங்க்யூ! நான் இன்னிக்கு சாயந்தரம் நாலு மணிக்கு ஓட்டல்ல வந்து உன்னைச் சந்திக்கிறேன். வெளியே எங்கேயும் போயிடாதே!''

''ஒன்றரை மணி நேரத்துல எப்படிடா பெங்களூர்லேருந்து கோயமுத்தூர் வருவே?''

''ஃப்ளைட்ல வர்றேன்... மூணு மணிக்கு ஒரு ஏர் பஸ் இருக்கு...''

**வ**ந்தான், சரியாய் நான்கு மணிக்கு.

''தந்தி கொடுத்தியே....? அந்த 'கௌண்டர் பாயில்' ரசீதை எடு!'' — அவன் அமர்த்த லாய்க் கேட்க நான் எடுத்துக் கொடுத்தேன்.

ஆவலாய் வாங்கி அதைத் தன் சர்ட் பாக்கெட்டில் போட்டுக் கொண்டான்.

''கௌதம்... என்னடா இதெல்லாம்?'' நான் குழப்பமாய்க் கேட்க....

''உம்... ஒரு கொலையைச் செய்த பின்னாடி நான் அதுல இருந்து தப்பிக்கிறதுக்காகச் செஞ்ச முன்னேற்பாடு இது!''

''கொ....கொ....கொலையா...?'' —நான் முகம் வெளுத்துத் திணறிய அதே விநாடி கௌதம் வெறித்தனமாய்ச் சிரித்தான்.

''ஆமான்டா செல்வம்...எனக்குத் துரோகம் செஞ்ச என்னோட மனைவி ரேகாவைத் தண்ணித் தொட்டில அமுத்திக் கொன்னுட்டு வாறேன். அந்தக் கொலையைச் செஞ்சவன் நான்தான்கிற சந்தேகம் போலீஸுக்குத் தப்பித் தவறிக்கூட வரக் கூடாதுங்கறதுக்காகத்

''பெண் நல்லாக் கதை எழுதுவாள், நாடகத்திலே நடிச்சிருக்காள், சினிமாவிலே நடிக்கக் கூட ஆர்வம் உண்டு. நல்லாப் பாடுவாள். வீணை வயலின் வாசிப்பாள். டான்ஸ் அரங்கேற்றம் ஆகி ரெண்டு வருஷம் ஆகுது. அப்புறம்...''

''ரொம்ப சந்தோஷம். இந்த நோட்டிலே உங்க பெண்ணோட ஆட்டோகிராஃபை மட்டும் வாங்கிக் கொடுத்திடுங்க. நாங்க பையனுக்கு வேறே இடம் பார்த்துக்குறோம்.''

-அ. இராமதாஸ்



தான் இத்தனை ஏற்பாடு... அவ கொலை செய்யப்படற நேரம் நான் கோயமுத்தூர்ல இருக்கனும்; அதுக்கு சாட்சியா நான் மத்தியானம் ரெண்டு மணிக்கு டெலிகிராம் கொடுத்திருக்கனும்... இப்ப ரேகாவைக்-கொன்னதுமே 'சைலேந்தர்'ங்கிற பேர்ல வாங்கி வச்சிருந்த 'ஏர்பஸ்' டிக்கட் மூலமா கோயமுத்தூர் வந்துட்டேன்...''

நான் கௌதமைப் பயப் பார்வை பார்த்தேன்.

''செல்வம்! இந்த விஷயம் உன்னைத் தவிர வேற யாருக்கும் தெரியாது. நீயும் போலீஸ்ல சொல்ல மாட்டேன்னு எனக்குத் தெரியும். அதனால்தான் உன்கிட்ட உதவி கேட்டேன். இன்னும் நீ செய்ய வேண்டிய உதவி ஒண்ணு இருக்கு... இப்போ நீ என்கூட பெங்களூர் வரப்போறே...! போலீஸ் ரேகாவோட 'பாடியோடு' எனக்காகக் காத்திருக்கும்... 'ரெண்டு நாளா கௌதம் என்கூடத்தான் கோயமுத்தூர்லே இருந்தான் பிஸினெஸ் விஷயமா பம்பாய்க்குத் தந்தி கூடக் குடுத்தான்' அப்படீன்னு நீ போலீஸ் கிட்டச் சொல்லணும்... என்ன சொல்லுவியா...?''

பற்களை நறநறவென்று கடித்தபடி என்னை நெருங்கினான் கௌதம்.

அதே விநாடி....

அறைக் கதவு படபடவென்று தட்டப்பட, நான் தடதடக்கிற இதயத்தோடு போய்க் கதவைத் திறந்தேன்.

வெள்ளுடுப்பு உடைகளோடு இரண்டு ஆண் நர்ஸ்கள் பக்கத்துக்கொருவராக நின்றிருக்க — நடுவே சிவப்பாய் — உயரமாய் — மூக்குக் கண்ணாடியோடு ஒருவர் நின்றிருந்தார். என்னைப் பார்த்ததும் சொன்னார். ''ஐயாம் சத்யேந்திரன்... டாக்டர்...சைக்கியாட்ரிஸ்ட்...!''

கோவை ராம்நகரில் இருக்கும் மனநோய் வைத்திய நிபுணர் சத்யேந்திரன் இவர்தானா? என்னைப் பிரமிப்பு ஆள ஒன்றும் பேசத் தோன்றாமல் அவரையே பார்த்தேன்.

கௌதமைப் பார்த்தபடி அவர் அறைக்குள் நுழைந்தார்.

''ஹலோ... கௌதம்! நீங்க இங்கேயா இருக்கீங்க? உங்களை எங்கெங்கே தேடறது?'' சொல்லிக் கொண்டே அவனை நெருங்க—

கௌதம் பின்னுக்கு நகர்ந்தான் மிரட்சியோடு. ''டாக்டர்... நான் ரேகாவைக் கொன்னுட்டேன். ஆனா நான்தான் அவளைக் கொன்னேன்னு போலீஸ்ல சொல்ல முடியாது. ஏன்னா அந்தச் சமயத்திலே நான் கோயமுத்தூர்ல இருந்திருக்கேன்... தந்தி கூடக் கொடுத்திருக்கேன்...''

டாக்டர் சிரித்தார். ''யூ ஆர் கொய்ட் கரெக்ட் மிஸ்டர் கௌதம்! அருமையா 'பிளான்' பண்ணி ரேகாவைக் கொலை செஞ்சிருக்கீங்க! நீங்கதான் அந்தக் கொலையைச் செஞ்சீங்கங்கிறதுக்கு ஆதாரமே யில்லே... யூ...ஹேவ் பிளான்ட் வெரி வெல்...''

''தேங்க்யூ வெரிமச் டாக்டர்...''கௌதம் சந்தோஷமாய்ச் சிரிக்க டாக்டர் சொன்னார்: ''வாங்க கௌதம்... ஹாஸ்பிடலுக்குப் போயிடலாம்..., போலீஸ் ஏதாவது விசாரிக்க வந்தா நான் உங்களுக்குத் துணையா இருக்கேன்....''



''இதுவரைக்கும் 99 கதைகளை அனுப்பிச்சேன். எல்லாம் பிரசுரிக்கஇயலாமைக்கு வருந்துகிறோம்னு திரும்பி வந்துடுச்சு! என்னோட நூறாவது கதைக்கு மகிழ்ச்சியான செய்தியை எதிர்பார்க்கிறேன்னு கடிதம் எழுதி அனுப்பிச்சேன்!''

''பிரசுரிச்சாங்களா?''

''இல்லே சார்! பிரசுரிக்க இயலாமைக்கு மகிழ்ச்சி அடைகிறோம்னு திரும்பி வந்துடுச்சு!''

-எஸ். ஜெயராமன்

---

''ஆர் யூ ஷ்யூர் டாக்டர்?''

''ஷ்யூர்....''

''சரி வாங்க, போலாம்...'' கௌதம் என்னைப் பொருட்படுத்தாமல் நடக்க, ஆண் நர்ஸ்கள் இரண்டு பேரும் — அவனுக்கு இரண்டு பக்கங்களிலும் நடந்தார்கள்.

டாக்டர் சத்யேந்திரன் என் பக்கமாய்த் திரும்பினார்.

''கடந்த நாலு நாளா நாங்க கௌதமைத் தேடறோம்!''

நான் அதிர்ச்சியிலிருந்து மீளாமலேயே கேட்டேன். ''ஏன் கௌதமுக்கு என்ன?''

டாக்டர் மெல்லிய குரலில் சொன்னார். ''கௌதமைப் பற்றிய விஷயம் உங்களுக்குத் தெரியாதுன்னு நினைக்கிறேன். ஆறு மாதத்துக்கு முன்னாடி தனக்குத் துரோகம் செஞ்ச மனைவி ரேகாவை 'தீர்த்துக்கட்ட' திட்டம் தீட்டி — கொலைப் பழியிலிருந்து தப்பிக்கச் சில முன்னேற்பாடுகளையும் செய்தார். ஆனால் மனைவியைக் கொலை செஞ்ச பின்னாடி அவர் செஞ்ச ஒரு சின்னத் தவறினால் போலீஸ்ல மாட்டிக்கிட்டார். போலீஸ் தன்னைக் கண்டு பிடிச்சுட்டாங்கங்கிற உண்மை அவருடைய மனநிலையைப் பாதிச்சுடுச்சு. இந்த ஆறு மாசமா நான்தான் அவருக்கு ட்ரீட்மெண்ட் எடுத்துக்கிட்டிருக்கேன். அடிக்கடி இது மாதிரி வெளியேவந்து தந்தி ஆபீசுக்குப் போய்த் தந்தி பாரத்தை வாங்கி பில்லப் செஞ்சு தனக்குத் தெரிஞ்சவங்க கிட்டக் கொடுத்து மத்தியானம் ரெண்டு மணிக்கு டெலிகிராம் கொடுக்கச் சொல்வார். மறுநாள் ரெண்டரை மணிக்கு போன் செஞ்சு ஃபிளைட்ல புறப்பட்டு வர்றதா சொல்லுவார்... இதெல்லாம்... இந்த முன்னேற்பாடுகளெல்லாம் ஆறு மாசத்துக்கு முன்னாடி இவராலே செய்யப்பட்டவை...''

டாக்டர் சொல்லிக் கொண்டே போக—

என் இதயம் ஏனோ வலிக்க ஆரம்பித்தது.

ஆண் நர்ஸ்களின் இறுக்கமான பிடியில் திமிறிக் கொண்டே செல்லும் என் கல்லூரிக் கால நண்பன் கௌதமை விழிகள் நனையப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

# கங்கை கொண்ட சோழபுரம்

கங்கைகொண்ட சோழபுரத்தில் உள்ள திருக்கோயில் அற்புதமான கலைப் படைப்பாகும். ராஜராஜனின் மைந்தனான ராஜேந்திரன் எடுப்பித்த கோயில் அது. அங்குதான் எத்தனை எத்தனை அழகிய சிற்பங்கள்! கோஷ்டங்களிலும் மாடங்களிலும் எத்தனை எத்தனை சிலாமூர்த்திகள்! அத்தனையும் பேசும் பொற்சித்திரங்கள்! யாவும் கல்லில் வடித்த கவிதைகள்!

பெரிய பெரிய மூர்த்திகளில் காணப் பெறும் நுணுக்கங்கள் யாவும் சின்னஞ்சிறு சிற்பங்களிலும் விளங்கும். தாண்டவமூர்த்தியையும் அதைச் சுற்றியுள்ள பல்வேறு சிற்பங்களையும் நோக்குங்கள்! எத்தனை அருமைப்பாடுகளை அவை வெளிப்படுத்திக் கொண்டிருக்கின்றன. அடுத்துள்ள கங்காதர மூர்த்தியையும் பார்வதியையும் காணுங்கள். எத்துணைக் காம்பீர்யம் மலர்கிறது! அடுத்துள்ள சண்டசானுக்ரக மூர்த்தியை நோக்குங்கள்! என்ன பரிவு! எவ்வளவு பக்தி வினயம்! எத்துணை மகிழ்ச்சி!






# அமைதியில் ஆழ்ந்திருக்கும் ஆலயம்

டி. ராஜேந்திரன்

மதுராந்தகம் ஸ்வேதாரண்யேஸ்வரர் ஆலயம்.

வெண் கொக்கு மந்தாரைக் காட்டினிடையே தோன்றிய பின்னணி இச்சிவனுக்கு உண்டு. ஆலயத்துக்கும் ஒரு சரித்திரப் பின்னணி உண்டு.

ஊர்க்காரர்களுக்கு எதுவுமே சரியாய் இருக்க வேண்டுமென்பதில் ஆர்வம், பற்று, கருத்து எல்லாம். எது சிவகளம் என்பதை உணர்ந்து இதையே அதுவாக வைத்திருக்கும் பாங்கு!

இதையும் என்னால் நேசிக்க முடிகிறதே! லிங்கம் எண்ணெய் காணுமலா வெண்ணெயாய்ப் பூத்துப் போயிருக்கிறது? இடுகாட்டுச் சாம்பலைப் பூசிக்கொண்ட யதார்த்தம் இல்லையோ, அது!

தரையில் வருவதைவிட செழிப்பாக இங்கு கட்டுமானங்களை உடைத்துக்கொண்டு வளருகிறது அரசு.

பசுமையைப் பார்த்தால் குளிர்ச்சியில்லையோ? என் கண்ணில் நீர் ஏன் வருகிறது?

நீண்ட பிராகாரங்கள். வெளிச் சுற்றில் வில்வம், தென்னை, நாகலிங்கம், குவளை, கொக்கு புஷ்பம். இங்கு நடக்கும் தனிமை ஆட்சியின் சுற்றுப் பரிவாரங்கள் இவை. மனத்துக்கு உகந்ததாய் நிற்கின்றன.

நித்திய சேவார்த்திகளை எண்ணிவிடலாம். ஒன், டு, த்ரீ வரை கிண்டர் கார்ட்டன் குழந்தையே சொல்லுமே!

பஜனை நடப்பதுண்டு. 'கைத்தல நிறைகனி' என்று ஆரம்பிக்கிற ஒருவர், 'தோடுடைய செவியனை' இடையே பாடுகிற மற்றவர், 'பவமான' என்று தெலுங்கில் முடிக்கிற கடைசி நபர்.

இப்போதும் இங்கு அமைதியின் ஆரவாரமே!

நொந்துபோன குருக்கள் சொல்கிறார்— காதத்திற்கு ஒன்று என்று 'மினுக் மினுக்' கென்றிருந்த மின் விளக்குகளுக்கு நைந்துபோன ஒயர் வழியே வந்த மின்சாரம் காலமாகிப் போனதை; 'எக்ஸ்ட்ரா' பணமில்லாததால் சரிசெய்ய முடியாமல் போனதை! ஜோதி ஸ்வரூபமான இவனுக்கு வெளிச்சம்? அகல் விளக்கில்லவா தெய்வீகம்! பார்வைக்கு அழகு. இதயத்திற்கு இதம். இருட்டினில் கள்வர் பயமில்லை. அவர் பயனற்ற அமைதியை அபகரிக்கத்தான் வருவாரோ!

பெண்கள் இல்லாத கிராமம் இல்லை மதுராந்தகம்.

வெள்ளி, செவ்வாய், ராகுகாலத்தில் துர்க்கைக்கு எலுமிச்சம் பழத்தில் விளக்கேற்றி வைத்தால் நல்ல வரன் கிடைக்குமாம். சனாதன நம்பிக்கை.

நான் நித்தியபடி போகிறபோது வெள்ளிதான் வந்திருக்கிறது. செவ்வாய்தான் வந்திருக்கிறது.

வயதுக்கு வந்த ஊர்ப் பெண்கள் அனைவருக்குமே திருமணமாகி விட்டதோ!

பாதகமில்லை, வம்பளப்பு, சலசலப்பு, மன அலைக்கழிப்பின்றிச் சௌக்கியமான அமைதி, சூழ்நிலைக்குத் தூபமிட்டுக் கொண்டிருக்கிறது. மனம் ஆரோக்கியத்தில் குளிக்கிறது.

இந்தச் சுடுகாட்டு அமைதியில்தான் மூளையைச் செல்லரிக்கும் சில பிரச்சினைகளுக்கு மருந்து கிடைக்கிறது.

நந்திமேளம் கைத்தட்டலாய் என்னை உற்சாகப்படுத்துகிறது. அறைபடும் தாளக்கட்டுகளின் அதிர்வுகள் அரைகுறை சிந்தனையின் அழுக்கு நீட்டினை அலசி விடுகின்றன.

நல்ல சிந்தனைகள் எல்லாம் சிவ ரூபமாகத்தான் விஸ்வரூப மெடுக்கின்றன; தணிந்து உறைகின்றன.

நான் ஒதுங்குகிற இடம், மற்றவர்கள் ஒதுக்குகிற இடம்!

அமைதி. மரண அமைதிதான். ஆனால் இதைச் சுவாசிக்கத்தான் எவ்வளவு சுகமாக இருக்கிறது!



பூர்ணம்: இவர்... சுஜாதா... மிஸ்டர் நாடக உலகை வழிமறிச்சுக் கன்னத்திலும் அடிச்சது உண்மைதான். ஆனா எதுக்காக அப்படிச் செய்தார்? தூங்கி வழிஞ்சுக்கிட்டு, கண்ணுக்கு மறைப்புப் போட்டுக்கிட்ட குதிரை மாதிரி நடந்த அதுக்கு ஒரு லட்சியப் பிடிப்பை ஏற்படுத்திக் கொடுக்கவும் சமுதாயப் பிரக்ஞையை ஊட்டவும்தான்?

கணேஷ்: அதே போல், ஆள்வோருக்கும் ஆளப்படுவோருக்குமிடையே இவர் விரோதத்தை வளர்க்க முயல்கிறார் என்பதை விட ஆளப்படுவோருக்கு ஒரு விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தித் தந்திருக்கார்னு சொல்லலாமில்லியா? அங்கிங்கெனாதபடி எங்கும் வியாபித்திருக்கும் லஞ்ச ஊழல், நமது சமுதாயத்தை நாசமாக்க இடம் தருவதும் தராததும் நம்மிடமேதான் இருக்கு என்கிறதை வலியுறுத்தியிருக்கார் இல்லையா?

பூர்ணம்: நிச்சயமா.

# மிஸ்டர் சுஜாதாவின் விநோத வழக்கு!

பிராஸிக்யூட்டர்: நீதிபதி அவர்களே! இதோ குற்றவாளிக் கூண்டில் நிற்கும் சுஜாதா மூன்று பயங்கரக் குற்றங்களைப் புரிந்திருக்கிறார்! ஒன்று, தன்பாட்டுக்குத்தனிவழி நடந்துகொண்டிருந்த மிஸ்டர் நாடக உலகத்தை வழிமறித்து, உலுக்கி எடுத்து, கன்னத்தில் அறைந்தும் இருக்கிறார். இரண்டாவது, இந்த நாட்டில் ஆள்வோரும் ஆளப்படுவோரும் ஒருவரை யொருவர் அனுசரித்துக்கொண்டு சௌஜன்யமாகப் போய்க் கொண்டிருக்கிறார்கள். அவர்களிடையே விரோதத்தை உண்டுபண்ண நாடகம் மூலம் சதிபண்ணியிருக்கிறார். மூன்றாவது, மரபுகளை எல்லாம் மீறுகிற விதமாய் முடிவை முதலிலேயே தெரிவித்து ஒரு நாடகம் எழுதி அரங்கேற்றியிருக்கிறார்!

நீதிபதி: என்ன மிஸ்டர் சுஜாதா! நீங்கள் உங்கள் சார்பிலே ஏதாவது சொல்ல விரும்புறீங்களா?

சுஜாதா: நோ, யுவர் ஆனர். ஐ பிளீட் கில்டி. நான் இந்தக் குற்றங்களையெல்லாம் செய்தவன்தான். எனக்குத் தண்டனை கொடுங்க. என் சார்பிலே வாதாட நான் வக்கில் யாரையும் அமர்த்திக் கொள்ளப் போறதில்லே.

நீதிபதி: நோ நோ! அதெப்படி! உங்க சார்பிலே வாதாட நான் கணேஷை நியமிக்கிறேன். அவர்தான்இந்த மாதிரி விநோத வழக்குகளை ஏற்க முன்வருவார்!

### காட்சி 2

நீதிபதி: யெஸ் மிஸ்டர் கணேஷ்! யு மே புரொஸீட்!

கணேஷ்: யுவர் ஆனர்! என் முதல் சாட்சி பூர்ணம் விசுவநாதன்... மிஸ்டர் பூர்ணம், சம்பவம் நடந்தபோதெல்லாம் நீங்க உடன் இருந்திருக்கீங்க. முதல் குற்றச்சாட்டு பற்றி நீங்க ஏதாவது சொல்ல விரும்பறீங்களா?

கணேஷ்: மூன்றாவது குற்றச்சாட்டு பற்றி என்ன சொல்றீங்க? நீங்க நாடகத் துறையில் பழுத்த அனுபவமுள்ளவராச்சே!

பூர்ணம்: தாங்க்யூ! ம்ம்... முடிவை முதலிலேயே தெரியப்படுத்திடறார் என்பது நிஜம்தான். ஆனால் மூன்று முடிவுகளுக்குள்ளேயும் சின்னச் சின்ன முடிச்சுக்களைப் போட்டு, திருப்பங்களைக் கொடுத்து, ரொம்ப சுவாரஸ்யமாய்ச் செய்திருக்கார். இதனால் நாடகத்தில் சஸ்பென்ஸ் எலிமெண்ட் இல்லாத போனாலும் கடைசிவரைக்கும் இன்டரஸ்ட் ஸஸ்டெய்ன் ஆறது! மரபுகளை மீறியும் மீறாத மாதிரி இருக்கு!

கணேஷ்: யுவர் ஆனர்! என் அடுத்த விட்னஸ் ஸ்ரீமான் நாடக ரசிகர். மிஸ்டர் ரசிகர்! நீங்க 'டாக்டர்நரேந்திரனின் விநோத வழக்கு'ங்கிற இந்த நாடகத்தைப் பார்த்தீங்களா?

ரசிகர்: ஓ எஸ்! அன்று ஒரு நாள்... (குரல் ஒலிக்க ஃப்ளாஷ் பாக்கில் காட்சி விரிகிறது) அண்ணாமலை மன்றத்தில் நான் பிரமித்துப் போய் உட்கார்ந்திருந்தேன்! 'தமிழிலா இவ்ளோ நல்ல நாடகம்'னு ஒரே ஆச்சரியம்! பூர்ணத்தோட ஆக்டிங், டைரக்ஷன்—எதை அதிகமா பாராட்டறதுன்னு புரியலே. அந்தப் பயல் மாஸ்டர் மகேஷ் திமிர்னு'என்னைக் காப்பாத்துங்கடாக்டர்!எனக்குநிறையப்படிக்கணும்னு ஆசையா இருக்கு டாக்டர்'ன்னு அலறினனே அப்ப, கண்ணீரைத் துடைச்சுக்கக் கர்ச்சீப்பைத் தேடினேன். கணேஷாவும் வஸந்தாகவும் பலதேவும்தியாகராஜனும் ஜமாய்ச்சுட்டாங்க. நோயாளி சரவணன் மனைவியா ஷோபா, புடவையைத்தூக்கிக் கொண்டு, 'யோவ்' போட்டுப் பேச...அதை விட படா தமாஷ்... யுவர் ஆனர்... உங்களைப் போலவே ஒரு நீதிபதியாக ஜி. எஸ். மூர்த்தி.... ஹி....ஹி....ஹி....நினைச்சாலே சிரிப்புத் தாங்கலே! ஹி....ஹி....ஹி....

நீதிபதி: ஆர்டர் ஆர்டர்! தீர்ப்பு 62ம் பக்கம் வழங்கப்படும்!

மணி பத்தாகப் போகிறது...
என்ன செய்யப் போகிறேன்...'
ஆறு ஆறுமா திரும்பி வர....'
Waiting for the worst

● முகம் அலம்பிக்கொண்டேன்.
'ட்ரிம்'ஆக இல்லாவிட்டால் அவருக்குப் பிடிக்காது.
கவராகப் பொட்டு வைக்கவில்லையென்றால் 'காச்-மூச்' என்று கத்துவார்.
அதென்ன கண்ணாடியில் விதவைக் கோலம் சேச்சே... வீண் பிரமை...அவர் நூறாண்டு வாழணும்; என்னுடன் இணைந்து.
கண்ணெதிரே இருந்தது குங்கும டப்பி.
விரல்களில் ஏன் இந்த நடுக்கம்? கோர்த்துக்கொண்டேன். பிரிவை விரும்பவில்லை நான். என்னவர் நல்லவர். வந்ததும் வராததுமாக — ஆல் யூஷுவல் — பிடரியில் விரல்களை ஓடவிட்டு....
ம்ஹூம்... நோ ஹோப்ஸ்....

● என் வீட்டுக்காரருக்குச் சந்ததி வேண்டுமாம்.
வேண்டாமென்று சொன்னேன்.. எனக்கு மட்டும் ஆசை இல்லையா என்ன... கான்வெண்டுக்குப் போகு முன் காலையே சுற்றிக் கொண்டு நிற்கிறானே கண்ணன்; என்னை 'மம்மி-மம்மி' என்கிறான். என் வீட்டுக்காரர் அண்ணாவாம். பெற்றவள் அக்காவாம். என் நாத்தனார் பிள்ளை.
அவன் செய்த விஷமம்...
நான் என்ன செய்யப் போகிறேன்?
என்ன ஆகப் போகிறது ....

● வாணலியில் உப்புமா 'புசுக் புசுக்'கென்று காற்றுக் குமிழ்களை வெடித்து மூச்சு விட்டது. (சீரியஸ் கதைதான் — ஐ ஆம் வெயிட்டிங் ஃபார் த வொர்ஸ்ட் டு ஹாப்பென் — ஆசுவாசப்படுத்திக் கொள்ள அப்படி இப்படி பொறுத்திக் கொண்டிருக்கிறேன்.)
என் நாத்தனாருக்கு இந்த ஐயிட்டம் பிடிக்காது. இருந்தும் என்ன செய்ய...
மாதக் கடைசி. பட்ஜெட் அதற்குத்தான் இடம் கொடுத்தது.
ஒன்பதுக்குள் டிபன் பாக்ஸ் ரெடியாக வேண்டும். ஆபீசுக்குப் போகிறாள், துன்பத்தை மறக்க. இளம் வயதில் பொட்டிழந்தவள். எனக்கு அஞ்சு வயது கம்மி.
அவளுக்கு ஒன்று என்றால் இவருக்குப் பொறுக்காது. பொத்துக் கொண்டு வந்துவிடும். தங்கை மேல் அப்படி ஒரு பாசம்; பிடிப்பு.

● ''அண்ணி! கொஞ்சம் டவல் போடுங்கோ!'' —குளியல் அறைக்குள் போவதற்கு முன்பாகவே எல்லாவற்றையும் செட்டாக எடுத்துச் சென்றால் என்ன' தினமும் அதே குரல்.
வாணலியில் கிண்டிக்கொண்டிருக்கிறேன்.
''தோ, வரேன்.'' — நான் ஓட வேண்டும். ஓடினேன்.
''டேய், கண்ணா... அம்மாவோட கைப்பையை ஏன் நோண்டறே...'' — நான்.
''உன்னுதா இது?''
''அதாண்டா... உங்க அக்காவுது!''— செல்லமாக உச்சி முகர்கிறேன்.
''போ.... காட்பரீஸ் வாங்கக் காசு வேணும்...'' — ஓடுகிறான்.
துரத்திப் பிடிக்கணும். இப்ப முடியாது. கிண்டிக் கொடுத்தாலும் ஒட்டிக் கொள்கிறது.... போச்சு...: தெரிந்து கொண்டேன். 'பொல பொல'வென்று வராது.
நாத்தனார் கத்தப் போகிறாள். ''எனக்குப் பிடிக்காதுன்னு தெரிஞ்சிருந்தும் உப்புமா கிளறினே; இல்லே அண்ணி... பாரமா இருக்கேன்னு சொல்லேன்; இங்கே கொடுக்கிற காசை அங்கே கொடுத்தா, ஹாஸ்டல்லே அமர்க்களமாப் போடுவான்'' — அவள் கேட்கத்தான் போகிறாள். வழக்கமான டயலாக்.
அவர் வேறு கத்தப் போகிறார்: ''தெரிஞ்சும் ஏன் இப்படிச் செய்தே'' — நேற்று ராத்திரியும், காலையிலேயும் என்னைப் பாடாய் படுத்தியது நினைவுக்கு வரப் போவதில்லை. சந்ததி வேண்டுமாம்...எழுந்திருக்கும்போதே ஏழாகிவிட்டிருந்தது. இருபத்திரண்டுக்கு அறுபது அடியில் நாளுக்கொரு தரம் நாற்பது மைல் நடக்க வேண்டும் நான்... அதுவும் ஒன்பது மணிக்குள்.
கண்ணனுக்கு கான்வெண்ட்...
நாத்தனாருக்கு ஆபீஸ்...
என்னவருக்கு எக்ஸிக்யூடிவ் மீட்டிங். தோல், தொடப்பக்கட்டை, இன்ன பிற...
நான் ஒரு இயந்திரம்.
'க்விக்'காகச் செய்யவேண்டுமானால் இதை விட்டால் வேறு கதி?
அதைப் பற்றி அவருக்குக் கவலை யில்லை. தங்கச்சியைப் பட்டினி போட்ட பத்தினி நான்.
கத்தத்தான் செய்தார்.
காரணம் அதுவல்ல.

● குளியலறை மூடப்பட்டே இருந்தது.
'படார்-படா'ரென்று என்னவர் அறையில் டிராயர்கள் ஒலித்தன.
''கௌசி... ஸ்பெக்ஸ் எங்கேம்மா'' — தேடிக் கொண்டிருந்தவர் குரல்கொடுத்தார்.

---

**மாமியார் ஹோட்டல்!**

தஞ்சைப் புகைவண்டி சந்திப்பிற்கு அருகில் உள்ள ஒரு ஹோட்டலின் பெயர்: 'மாமியார் ஹோட்டல்'! -கி. நரசிம்மன்



ஒன்பது மணிக்கெல்லாம் கம்பெனியில இருக்க வேண்டும். எம். டி. வருகிறாராம்.

''தோ வர்றேன்...''–இன்னும் ரெண்டே இண்டுதான் பாக்கி. இறக்கி விடலாம். இல்லா விட்டால் அடிப் பிடித்து விடும்.

இரண்டாவது 'கௌ:ச்'யில் கோபம் தொனித்தது.

''ஷூ லேஸ் கட்டி விடேம்மா''வைப் புறக்கணித்து ''தோ, வந்திட்டேன்'.' என்று ஓடினேன். அவருக்குக் கோபம் வருவது அபூர்வம். என்ன ஆயிற்று இன்று?

''போ, நான் ஸ்கூலுக்குப் போக மாட்டேன்.'' பின்னணியில் உப்புமா கருகிக்கொண்டிருந்தது.

உள் நுழைந்ததும் என் தோள்களைப்பிடித்து உலுக்கு உலுக்கு என்று உலுக்கிவிட்டார். கோபக் கனல். ''why why'' என்றார்.

நான் விழித்தேன்.

''ஏன்... ஏன் இப்படிச் செய்தே?'' வாட்சைப் பார்த்தார். ''காட்! ஆல்ரெடி லேட்... உன்னை... இரு வந்து பேசிக்கிறேன்.. சரியான பதில் கிடைக்கலே. இந்த வீட்டிலே இருக்க முடியாது.... கணவன் மனைவியா வாழறதிலே பொருளே இல்லை.... என் விருப்பத்துக்கு எதிரா... எனக்குத் தெரியாம.... ம்'' என்று கூச்சலிட்டவர் கண்களில் தீப்பொறி பறந்தது. கையில் சின்னதாய் இருந்த அட்டைப் பெட்டியை வீசி எறிந்தார். அது சுவரில் பட்டுப் பிரசவித்தது.

மாத்திரைகள்....

புயலாகப் போய்விட்டார்.

''போயிட்டு வரேண்டா கண்ணு'' என்று அறையைக் கடந்தாள் நாத்தனார்....

கையில் டிபன் பாக்ஸ் இல்லை... குரலில் எரிச்சல்.... என்னிடம் 'என்ன-ஏது' என்று கூடக் கேட்கவில்லை.

''அம்மா ரிக்ஷா வந்திரிச்சு போகணும்.'' ஷூ லேஸைக் கட்டிவிட்டு, ரிக்ஷாவில் ஏற்றிவிட்டு வந்தேன்.

என்னவரின் கோபத்துக்குக் காரணமாக இருந்த அட்டைப் பெட்டியை எடுத்துப் பார்த்தபோது அர்த்தம் புரிந்தது...

கருத்தடை மாத்திரைகள்....

சந்ததிக்குத் தடையாக சத்தியமாக நான் உபயோகப்படுத்தவில்லை...

அப்போ....

பொட்டிழந்த நாத்தனார்...

கண்ணனைப் பெற்றவள்....

கைப் பையை நோண்டிக் கொண்டிருந்தவன் தவறுதலாகப் போட்டிருக்கிறான்.–அவர் அறைக்குள்....

ஒப்புக்கொள்வாளா?

'நானில்லை' என்று நான் சொன்னால் நம்புவாரா?

● என்ன செய்யப் போகிறேன்....
என்ன ஆகப் போகிறது...'
Waiting for the worst!

## ஸ்டில் பற்றிய ஸ்டோரி!

| சிறுகதை | நடிகர்கள் | திரைப்படம் |
|---|---|---|
| 1. சபலம் | சந்திரசேகர், உஷா | பட்டம் பறக்கட்டும் |
| 2. ஸரமஞ்சம் | வடிவுக்கரசி-ரூபாதேவி | நடமாடும் சிலைகள் |
| 3. ஒரு மனைவி ஓராயிரம் சந்தேகம் | எஸ்.எஸ். சந்திரன், சச்சு | பட்டம் பறக்கட்டும் |
| 4. இருட்டுப் பறவை | விஜய்காந்த் | பார்வையின் மறுபக்கம் |
| 5. ஒரு நாள் காலை ஒன்பது மணி அளவில் | ராதிகா | வடிவங்கள் |
| 6. பூ ஒன்று தேங்கி... தயங்கி... | கவிதா, சந்திரசேகர் | அர்ச்சனைப்பூக்கள் |

குறிப்பு: இந்த இதழில் வெளியாகியுள்ள சிறுகதைகளுக்கும் திரைக்கதைகளுக்கும் எந்தவித சம்பந்தமும் இல்லை.

புகைப்படங்கள் தொகுப்பு: சலன்

## பாத்திரப் படைப்பு

# ரசிகமணி ரசித்த மணிகள்

## மீ.ப.சோமு



ரசிகமணி என்றால் அவரைப் பழம்பெரும் இலக்கியங்களோடு மட்டுமே இணைத்துப் பார்க்கிறோம் அல்லவா? அவர் இந்தக் காலத்து எழுத்தாளர்களின் பாணியிலே ஒரு பாத்திரத்தைப் படைத்துக் காட்டுகிறார்! கம்ப ராமாயணத்தையும் முத்தொள்ளாயிரத்தையும் எடுத்து விளக்குகிற அதே குரல் இப்போது ஒரு கதாசிரியராக நின்று பேசுவதைக் காணலாம்:

நாற்பது வருஷங்களுக்கு முன்னே நரசிம்மராவ் செட்டுதான் செட்டு! நாடகக் கம்பெனி வரப்போகிறதாக இரண்டு மாசத்துக்கு முன்னமேயே ஊரெல்லாம் பேச்சு! கொட்டகை போடுகிறதைப் பார்க்கவே மாடு போட்டு வண்டி ஏறி வருவார்கள். நடிகர்கள் வந்தவுடன் ஒரு பரபரப்பு. அவர்களில் சிலர் வந்து சேரவில்லை என்கிறதிலும் ஒரு பரபரப்பு!

நாடக மேடையில் நவ ரஸங்களையெல்லாம் ஏற்பட்டிருந்த பாத்திரங்கள் மூலமாகப் பரிமாறிக் கொண்டு வந்தாலும், எல்லோருக்கும் ஒரு பார்ட்டில்தான் ரொம்பப் ப்ரீதி. அது எது என்றால், மாமா பார்ட்டு. அவர் நாடக மேடையில் உலாவும் நாசிக்கும் அவரை நாடி வருவோருக்கும் எப்படி மாமாவோ, எப்படி வேண்டியவரோ அப்படியே நாடகம் பார்ப்பவர்கள் எல்லோருக்கும் மாமாதான். வேண்டியவர்தான்! மாமா பார்ட்டு இல்லாத நாடகம் நாடகமே இல்லை. மாமா பார்ட்டு இல்லை என்றால் டிக்கட்டை வாபஸ் செய்யக்கூட எத்தனிப்பார்கள் ஜனங்கள்.

மாமாவின் மேல் மாத்திரம் இவ்வளவு உரிமை பாராட்டுகிறது எங்கே இருந்து வந்தது? காரணம், நாடக மேடையில் விஜயம் செய்யும் ராஜா, ராணி, ராட்சசர்கள் எல்லாரும் வேறு உலகத்தைச் சேர்ந்தவர்களாயிருக்க, மாமா ஒருவர் மட்டும்தான் இந்த உலகத்தைச் சேர்ந்தவர். அந்தக் காலத்தில் மிராசுதார்கள் வீட்டிலும், பண்ணையார்கள் வீட்டிலும் அவர் நடமாடித்திரிவதைச் சாதாரணமாய்ப் பார்க்கலாம். நாடக மேடையில் அவரைக் கண்டதும் ஏதோ எஜமானனைத் தேடித்தான் தெரியாமல் இராத்திரி ஆனதால் ஸ்டேஜுக்குள் புகுந்து விட்டாரோ என்று தோன்றும்.

மிராசுதார் வீட்டுக் காரியங்களில் மாமா புகாத மூக்கு முடை கிடையாது. நாற்று நடுகைக்கு ஆள் திரட்ட வேண்டுமானால் அவர்தான். சர்க்கார் உத்தியோகஸ்தர்களைப் பார்க்க வேண்டுமானால் அவர்தான். வண்டி போட வேண்டுமானால் அவர்தான். சாயங்காலம் சிநேகிதர்களுக்குப் பலகாரம் 'சப்ளை" செய்ய வேண்டுமானால், 'இதோ தயார்" என்பார். விருந்தோ, கிரகப் பிரவேசமோ கலியாணமோ வந்து விட்டால், மாமாவின் உபகாரத்தையும், அவர் உரிமை பாராட்டுவதையும் அருமை பாராட்டுவதையும் பார்த்தால் இவர் இல்லாமல் என்னதான் ஆகும் என்றே படும். மாமா ஒருவரா, அல்லது நூற்றுக் கணக்கான உருவங்களாகத் தன்னைப் பெருக்கிக் கொண்டுதான் உலாவுகிறாரா என்று சொல்லத் தோன்றும். வந்தவர்கள் எல்லாம் முறை கொண்டாட ஆரம்பித்து, எங்கே பார்த்தாலும் ''மாமா மாமா'' என்ற சத்தம்தான்.

இப்படியாகத் தோட்டி முதல் தொண்டைமான் வரைக்கும் எல்லோரும் உபசாரப்படுத்தி முறை கொண்டாடி வந்தாலும் ஒரு இடத்திலே மாமா பாடு ஆபத்துதான். வீட்டுக்குள்ளே போகிறதென்றால் அவருக்குப் புலிக் குகைக்குள் போகிறது போலத்தான். வீட்டு அம்மாளைக் கண்டதும் கருடனைக் கண்ட சர்ப்பம் போல் ஒடுங்கி விடுவார். இரவில் மூண்டு கொண்டிருந்த கோபமெல்லாம் விடியற்காலம் கவாலையாக

வீசி அவர் மேல் பாயும்! பிள்ளைகளாவது யாராவது மாமா என்று சொல்லிவிட்டால் போதும். ''மாமாவா, கோமாவா'' என்ற அதட்டல் உடனே வரும். அவர் நேராகத் தென்பட்டால் 'விழுவான்' தொட்டு சகஸ்ர நாமாவளி அர்ச்சனைதான்.

மாமாவின் மேல் அம்மாளுக்கு எவ்வளவோ எரிச்சல் இருந்த போதிலும், அவர் இல்லாமல் வீட்டுக் காரியம் ஒன்றும் சாயாது என்பது தெரியும். பால் கறக்கிறவன் வர நாழிகை ஆகிவிட்டால், 'விழுவானை'க் கூப்பிடச் சொல்லி, ''இவ்வளவு நாழியலும் எங்கே தொலைஞ்சு போனாய்? கத்தவெட்டி! பாலைக் கறந்து தொலை'' என்று சொல்ல வேண்டி வரும். அவர்தான் பிள்ளைகளைப் பள்ளிக்கூடத்துக்குக் கொண்டு போய் விட வேண்டும். அம்மாளுக்கு அலுவலாய் இருந்தால், பள்ளிக்கூடத்துக்குப் போகிற பெண்களுக்குத் தலை வாரி விட்டு விடுவார். அய்யா முதல் அம்மா வரைக்கும் அவர் தான் ஆஸ்பத்திரியிலிருந்து மருந்து வாங்கி வரவேண்டும். நல்ல மாதிரியாகக் கூடையிலே வைக்கோல் போட்டு, பத்து சோவையும் வைத்து அப்படியே கொண்டு வந்து சேர்ப்பார். கார்த்திகையன்று இரவு கோயிலுக்குப் போக வேண்டுமென்றால், கோயிலில் எல்லாவற்றையும் ஏற்பாடு பண்ணி விட்டுக் குழந்தையைத் தோளின் மீது வைத்துக் கொண்டு, அரிக்கேன் லாந்தரையும் எடுத்துக் கொண்டு, அம்மாவுக்கு முன்னால் நடக்கத் தயாராக நிற்பார். இவ்வளவும் 'விழுவானால்'தான் நடக்க வேண்டியிருப்பதால், 'வெடு வெடு' என்று பேசுவதைக் கொஞ்சம் மறக்கிற நேரங்களும் உண்டு அம்மாளுக்கு! ஆனால் அது அபூர்வந்தான். பொதுவாக நல்ல மாதிரிச் சேலைகளை ஜவுளிக் கடையிலிருந்து பொட்டணமாக அவரே தூக்கிக் கொண்டு வந்த சமயங்களில்தான் அவருக்குக் கொஞ்சம் உபசாரம். அந்த உபசாரத்திலும் கூட, அடிக்கடி சுருக்கென்று தைக்கும் படியான வார்த்தைகளும் சேர்ந்து பாயும்.

மிராசுதார் வீட்டிலே அம்மாளுக்கும் மாமாவுக்கும் ஏழாம் பொருத்தம் என்பது நாற்பது வருஷத்துக்கு முன் உண்மை; தற்போதும் உண்மை; தமிழ் நாட்டில் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னும் உண்மையே!

---

# அஞ்சாத நெஞ்சங்கள்

அஞ்சாத நெஞ்சங்கள் உண்மையில் தேவர் பிலிம்ஸ் கதை இலாகாவும், சங்கர் கணேஷும்தான். அஞ்சாமல் ஹாலிவுட் படங்களையும் இந்திப் பாடல்களையும் காப்பியடித்திருக்கிறார்களே!

கடைசிக் காட்சியில் மட்டும் தரிசனம் தரும் போலீஸ் உள்ள இந்தப் படத்தில் கதைக் கருவுக்கான நன்றியைப் பொன். பரமகுரு அவர்களுக்குச் செலுத்துகிறார்கள். சரியான தமாஷ்!

Five man armyயாய் உலா வருபவர்கள் சுமன், கராத்தே மணி, வனிதா, ரவீந்தர், ராஜீவ். கே. ஆர். விஜயா, ஜெய் சங்கர், சரிதா நடிக்கிறார்கள்.

ஒரே போட்டி மயம். சுமனுக்கும் கராத்தே மணிக்கும் கராத்தேவில். கே. ஆர். விஜயாவுக்கும் சரிதாவுக்கும் யார் அதிக பருமன் என்பதில். ரவீந்தருக்கும் ராஜீவுக்கும் ஸ்டைல் காட்டுவதில். ஜெய்சங்கர், பாவம் நல்லவரா, கெட்டவரா, அவருக்கே புரியவில்லை. நடிக்க வந்த வசன கர்த்தாக்கள் வரிசையில் தூயவன் ஆச்சரியமாய்.

தமிழ்ப் படங்களுக்கு ஒரு BUD SPENCER கிடைத்திருக்கிறார் — கராத்தே மணி. கராத்தேவோடு காமடியும் கலந்து அட்டகாசம் புரிகிறார். ஐவரில் மனத்தில் நிற்பவர் இவரே.

சண்டைக் காட்சிகள் படுவேகம். கிளைமாக்ஸ் ரயில் சண்டையும் நன்கு படமாக்கப்பட்டிருக்கிறது. யாருமே டூப் போடாமல் நடித்திருப்பதும் பாராட்டுக்குரியது.

டிக்கட் வாங்கும்போதே மூளையைக் கழற்றிக் கவுண்டரில் டெபாசிட் செய்து விடுவதால், அனாவசியமாய் கதை, டைரக்ஷன், காமரா, எடிட்டிங், பின்னணி இசை எதையும் பற்றிக் கவலையே படத் தேவையில்லை. ஜாலியாகப் பார்க்கலாம். — சிந்து ஜீவா





# ஒரு பூ தேங்கி, தயங்கி

பட்டுக்கோட்டை பிரபாகர்

முதலில் முத்து முத்தாய் உட்கார்ந்து அப்புறம் வேர் வேராய், இழை இழையாய்ப் புவியீர்ப்புச் சக்திக்குக் கட்டுப்பட்டுக் கொண்டிருந்தது மழை. பஸ்ஸின் கண்ணாடி மேல் வைப்பர் சளைக்காமல் ஈ விரட்டிக் கொண்டிருந்தது.

''யார் அவன் கௌரி?''

''சொல்றேனே... உங்க மடியிலே அப்படியே தூங்கிட்டான் தீபக். கீழே துண்டு விரிச்சுப் படுக்கப் போட்டுடட்டுமா?''

''வேணும் ஆட்டத்திலே மண்டை அடிபடும் இப்படியே தூங்கட்டும்.''

''ராத்திரி பூரா இப்படியேவா? தொடை வலிக்குங்க?''

''விடு கௌரி? அவன் ..''

''சொல்றேங்க. காலேல அவனைப் பார்த்தப்போ....''

அவனுக்கு அடையாளமே தெரியவில்லை.

சேகரா நீ? ஏன் கண் எல்லாம் உள்ளே போயிடுச்சி? அழகா, சின்னதா தாடி இருந்திச்சே, இப்ப இதென்ன சாமியாராட்டம்? எந்தக் கோயிலுக்கு? சாமி மேலே நம்பிக்கை எல்லாம் வந்திடுச்சா? இப்போ என்ன பண்ணறே? கல்யாணம்? குழந்தை? — கேட்க இத்தனை கேள்விகள் இருந்தும் சும்மா நின்ருள் வியந்து.

''என்னை ஞாபகமிருக்காங்க?''

''அம்மா, அந்தச்செவப்பு பூவிலே ரெண்டே ரெண்டு பறிச்சுக்கட்டுமா?''

''ஏய், ஏய்... அதெல்லாம் பறிக்கக் கூடாதுடா.''

''உன் பேரென்னப்பா?''

''தீபக்.''

''என்ன படிக்கிறே?''

''எல். கே. ஜி. யாரும்மா இவரு?''

''வந்து....வந்து....''

''என் பேர் சேகருப்பா. எங்கே இந்த அங்கிளுக்கு முத்தம் கொடு. காட்பரீஸ் வாங்கித் தருவேன்.''

''அவனை இறக்கி விட்டுடுங்க சேகர்! அப்புறம் வேசிலே இறங்க'மாட்டான்.''

''பரவாயில்லே. ஐ டோண்ட் ஃபீல்... அப்போ, ஊட்டியை விட்டுப் போன அதே வருஷமே கல்யாணம் ஆயிடுச்சா?'' என்று மேகத்தைப் பார்த்துக் கேட்டான்,

''ம்.''

''என்ன பண்ணுர்?''

''ஒரு பிரைவேட் கம்பெனில எக்ஸிக்யூடிவ் ஆஃபீஸர். இங்கே ஒரு கான்ஃபரன்ஸ். ரூமிலே போரடிச்சுது. அதான் கார்டனுக்கு அழைச்சுக்கிட்டு வந்தேன். என்ன பண்ணிட்டிருக்கீங்க?''

''ஹைச். பி. எஃப்ல வொர்க் பண்றேன். ஞாயித்துக் கிழமைகள்லே கார்ட்ஸ் விளையாடி இருபது ரூபா தோக்கறேன். தியேட்டர்ல இங்கிலீஷ் படம் வர்ற வரைக்கும் வெயிட் பண்றேன். செக்கஸ்லோவேக்கியான்னு சொன்னு, ''செக்ஸ்' என்ன சொன்னே ''ன்னு கேக்கற ஃப்ரண்ட்ஸ்கிட்டே சிகரெட்டுக்கு நெருப்புக் கேக்கறேன். எல்லாரும் சினிமா போனதும் கட்டில்லே படுத்துக்கிட்டு, பசுமையான நினைவுகளோடு

பாட்டுப் பாடறேன். பிரதி ஏழாம் மாசம் முப்பதாம் தேதி வர்றப்போ எல்லாம் கௌரியோட போட்டோவை எடுத்து...''

''சேகர், இப்போ நான்....''

''இனி அந்த வேலையும் இல்லே. என்ன பேசறதுன்னே தெரியலேங்க. சில விஷயங்கள்ல அதிகமா நம்பிடறோம். அதிகமா ஏமாந்துடறோம். மழை வருது. எங்கே தங்கியிருக்கீங்க? என் குடையிலே கொண்டாந்து விட்டுட்டு வரேன், வாங்க.''

''சேகர், நாங்க ஃபாமிலியோட ஊட்டியை விட்டுப் போனதுக்கப்பறம் என்ன நடந்ததுன்னு....''

''மழை பெருசா வருதுங்க. சுத்தமாப் பயனே இல்லாத சப்ஜெக்டை இப்போ ஆரம்பிக்கிறீங்களே.... தீபக், வாப்பா, நான் தூக்கிக்கிறேன்.''

குடையின் கீழ் மௌனமாக நடந்தார்கள். கார்டனை விட்டு வெளியேறி, லாட்ஜை நோக்கி நடக்கையில் கடையில் காட்பரீஸ் வாங்கி வந்து கொடுத்தான் சேகர்.

லாட்ஜ் கிட்டே வர....

''சின்ன மழைதான். நாங்க போய்க்கிறோம் சேகர்.''

''ஏன் அனாவசியமா நனையணும்? எனக்கு எதுவும் வேலை இல்லே. லாட்ஜ் வரைக்கும் வர்றேன்.''

''இல்லே, அதுக்குச் சொல்லலே. அவர் வந்துட்டார். பால்கனியிலே நிக்கறார். இன்னும் நம்மைப் பார்க்கலே. அதான்....''

''ஸாரிங்க. விஷ் யூ... வாட் டுஸே! வர்றேன்.''

விருட்டென்று விலகி வேகமாய் நடந்து மறைந்து போனான்.

அறைக்கு அழைத்து வந்து அவரிடம் அறிமுகம் செய்து வைக்கத் தைரியம் இல்லையா எனக்கு? இருக்கிறது. இவர் எப்படி எடுத்துக் கொள்வார் என்கிற பயமும் இருக்கிறது.

இதே சேகருடன் எத்தனை எத்தனை மாலைகள்....ஓ! நோ! நான் அதை நினைக்கவே கூடாது. ஆற்றில் மிதந்து வந்த பூ கொஞ்ச காலம் ஒரு நாணலில் தடைப்பட்டுத் தேங்கி நின்னு... பின் மறுபடியும் தன் ஓட்டத்தில் ஓடுவது போல...

இப்போது என் வாழ்க்கை எனக்கு முக்கியம்.

''யாரு, கொடையிலே கொண்டாந்து விட்டுட்டுப் போனானே, அவனைக் கேக்கறீங்களா? அப்பா இங்கே இருந்தப்ப பழக்கம். சின்னப் பையனா இருந்தான். இப்ப ரொம்ப வளர்ந்துட்டான். என்ன வேலை சொன்னாலும் செய்வான். எங்க ஃபாமிலின்னா உயிரு....''

''ரொம்பக் குளிருது இல்லே?''

ராமின் கை அவள் தோள் மேல் ஊர்ந்தது. அவளின் பெருமூச்சை உணரவில்லை. வைப்பர் இப்படியும் அப்படியும் நீரைக் கூட்டிக் கொண்டே இருக்க.... கிளை கிளையாய்க் கண்ணாடி மேல் மழை!

# அவரல்லவோ எழுத்தாளர்!

துமிலன்

ஸ்ரீ பி. ஸ்ரீ சுமார் நான்கு ஆண்டு காலம் போலீஸ்சப்இன்ஸ்பெக்டராக வேலைபார்த்து விட்டுப் பிறகு செட்டி நாட்டில்நடைபெற்று வந்த 'குமரன்'பத்திரிகையின் பொறுப்பாசிரியரானார். அதில் அவர் நிறையத் தொடர் கட்டுரைகள் எழுதி வந்தார். கட்டுரைகள் பெரும்பாலும் இலக்கியங்கள் சம்பந்தப்பட்டவை.

அவரது படைப்பு அமரர் கல்கி அவர்களின் கவனத்தைக் கவர்ந்தது.

அப்போது விகடனில் பிரசுரிக்கப்பட்டவை எல்லாம் (விளம்பரங்களைத் தவிர) நகைச் சுவையை அடிப்படையாகக் கொண்டவை. வாசகர்களுக்குத் திகட்டிப் போகக் கூடுமோ என்ற ஒரு சந்தேகம் ஏற்பட்டிருந்தது. நகைச் சுவையை 'பாலன்ஸ்' செய்ய வேண்டியிருந்தது. மத சம்பந்தமான, பக்தி சம்பந்தமான இலக்கியக் கட்டுரைகளைப் பிரசுரிப்பதென்று திட்டமிட்டோம்.

ஆனால் யாரை விட்டு எழுதச் சொல்வது? யாரால் எளிய தமிழ் நடையில் எழுத முடியும்? பி. ஸ்ரீ. அவர்களால் எழுத முடியும்; எழுதி வருகிறார் என்பது அவர் குமரன் பத்திரிகையில் எழுதியவற்றிலிருந்து தெரிய வந்தது.

எனவே, விகடனுக்குத் தொடர் கட்டுரைகள் எழுதி வருமாறு பி. ஸ்ரீ. அவர்களைக் கேட்டுக்கொண்டோம். அவரும் உற்சாகமாக எழுதி வரலானார். முதலில் திவ்யப் பிரபந்தத்தைப் பற்றி எழுதி வந்ததாக ஞாபகம். பிறகு 'சிவநேசச் செல்வர்கள்' என்ற தலைப்பில் தொடர் கட்டுரைகள். 'உல்லாச யாத்திரை' என்ற தலைப்பில் (பயணக் கட்டுரைகள் அல்ல) தாம் படித்து அனுபவித்த சில கதைகளைப் பற்றி. 'கிளைவ் முதல் ராஜாஜி வரை' என்ற தலைப்பில் இந்திய கவர்னர் ஜெனரல்களைப் பற்றி.

இவ்வளவிருந்தும் பி. ஸ்ரீ. அவர்களின் புகழை நிலைநாட்டியது அவரது சித்திர ராமாயணமும், கம்ப சித்திரமும்தான்.

பி. ஸ்ரீ. அவர்கள் விகடனில் கம்ப ராமாயணத்தைப் பற்றி எழுதி வரத் தொடங்கியதும், முதலில் அவரிடமிருந்து வரும் கையெழுத்துப் பிரதியைப் படித்துப் பார்ப்பேன். பிறகு, இரண்டு கட்டங்களில் அந்தக் கட்டுரையின் 'புரூப்'களைப் பார்ப்பேன். பார்த்தாக வேண்டும்.

இந்த இன்பத் 'தொல்லை' என்னைக் கம்பனின் கவிதைகளைப் பற்றிப் புரிந்துகொள்ளச் செய்து. அவற்றை அனுபவிக்கவும் வைத்தது.

கம்ப காவிய அமுதை என் போன்ற சாதாரண இளைஞர்களுக்கும் (நான் அப்போது இளைஞன்தானே!) மற்றவர்களுக்கும் புகட்ட அவர் கையாண்ட உத்தி இதுதான்:

முதலில் கவிதைக்கான சூழ்நிலையைப் பற்றிச் சுருக்கமாகச் சொல்வார்.

அதைப் படித்ததுமே வாசகர்களின் மனத்தில் ஒரு நாடகக் காட்சிஉருவாகிவிடும். பிறகு கவிதை தரப்படும். இரண்டு மூன்று வார்த்தைகளுக்கு மட்டும் பதவுரை. பிறகு விளக்கம் ஆரம்பமாகும்.



பி. ஸ்ரீ

பி. ஸ்ரீ. அவர்கள் கம்பனது கவிதைகளைத் தாம் ஐயந் திரிபறப் புரிந்து கொண்டு, அவற்றை அனுபவித்து, அதன் பயனாய்க் கவிதா சன்னதம் பெற்றுப் பிறகு நமக்கு எடுத்துக் கூறினார். அவரது படாடோபமற்ற ஜனநாயகத் தமிழ்நடை எல்லோரையும் கம்பனை அனுபவிக்க வைத்தது. அநாவசியமான குட்டிக் கதைகளையோ உபமானக் கதைகளையோ அவர் புகுத்துவதில்லை.

நான் இந்த மேதையை 1932ம் ஆண்டு வாக்கில் முதன் முதலில் சந்தித்தேன்.

நல்ல வாட்ட சாட்டமான உடலமைப்பு. நாற்காலியில் விரைப்புடன் உட்காருவார். முகத்தில் போலீஸ்காரரின் புன்னகை கலந்த கடுமை எப்போதும் தவழ்ந்து கொண்டிருக்கும். வார்த்தைகளை முழுசாக உச்சரித்து அழுத்தம் திருத்தமாகப் பேசுவார். அவர் போலீஸ் சப் இன்ஸ்பெக்டரா யிருந்தபோது தமது ஆங்கில மேலதிகாரிகள் சிலருக்குத் தமிழ் சொல்லிக் கொடுத்து வந்தார். பேச்சிலே அவர் கையாண்ட அழுத்தந் திருத்தம், ட்யூஷன் சொல்லிக் கொடுத்ததன் விளைவு என்று நினைக்கிறேன்.

பேச்சின்போது மில்டன், ஷேக்ஸ்பியர், ஷெல்லி, பைரன், டென்னிஸன், பர்னார்டு ஷா முதலியவர்களின் நூல்களிலிருந்து மேற்கோள்களை அள்ளி வீசுவார்.

சுமார் பதினைந்து வருடங்களுக்கு முன்னர் அவர், ஸ்ரீ பக்தவத்சலத்தின் விருப்பப்படி, 'காங்கிரஸ் சரித்திரம்' எழுதுவதில் ஈடுபட்டிருந்தார்.

பிற்காலத்தில் அவரால் தாமாகவே எழுத முடிவதில்லை. ஸ்ரீமதி லட்சுமி அம்மாள் என்ற பெண்மணி அவருக்கு உதவியாளராக இருந்து அவர் சொல்வதை எழுதி வருவார்.

அவரது ஒரு நூலுக்கு சாகித்திய அகாதமி பரிசு அளித்துக் கௌரவித்தது.

96 வயதுவரை எழுதி வந்தவர், ''உடல் நிலை அனுமதித்தால் மேலும் எழுதத் திட்டங்கள் வைத்திருக்கிறேன்'' என்றார். அவரல்லவோ எழுத்தாளர்!

## 7

பிரியாவுக்குத் தன்னைச் சமாளித்துக் கொள்ள வெகு நேரம் தேவைப்பட்டது. எப்படியோ ஒரு வழியாகக் கட்டிலுக்கு அருகில் உள்ள ஒரு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டாள். பார்வதியின் புகைப் படத்தைக் கவ்விப் பிடித்துக் கொண்டிருந்த விரல்களின் நடுக்கம் இன்னும் குறைந்த பாடில்லை. பலத்த பெருமூச்சுடன் புகைப் படத்தை இப்படியும் அப்படியுமாகத் திருப்பிப் பல முறை பார்த்தாள். ஆமாம்... அதே புடவை தான். பட்டை சரிகை போட்ட நீல நிற காஞ்சிபுரம் பட்டுப் புடவை... அதில் ஆங்காங்கே அழகுக்கு அழகு சேர்க்கும் வகையில் வேலைப்பாடுகள். அந்தப் புடவையைப் பற்றிப் பார்வதி பேசியது அவள் நினைவுக்கு வந்தது. அதை வாங்கியதற்குப் பிறகுதான் இந்தப் புகைப்படம் எடுக்கப்பட்டிருக்கிறது. அதில் எந்தவித சந்தேகமும் இல்லை. படத்தில் பார்வதிக்குப் பின்னால் பெருமையுடன் நிற்கும் மாமரம் அழகுடன் காட்சி அளித்தது. அந்த மரம் பங்களாவுக்கு வெளியே சுவரின் ஓரமாக உள்ளது. அப்படியென்றால் படம், பார்வதி வீட்டுக்கு வெளியே உட்கார்ந்திருந்தபோது எடுக்கப் பட்டிருக்க வேண்டும். பார்வதியின் முக பாவத்தைப் பார்க்கும்போது அதில் சோகம், சோர்வு சற்று அதிகமாகவே கலந்திருப்பது தெளிவாகவே தெரிந்தது. அதனால் அந்தப் படத்தைப் பார்வதிக்குத் தெரியாமல்தான் எடுத்திருக்க வேண்டும். எடுத்தது யார்? எதற்காக?

பிரியாவுக்கு வியர்க்கத் தொடங்கியது. அதனால் அவள் அணிந்திருக்கும் பிளவுஸ் முதுகோடு ஒட்டிக் கொண்டது. நாற்காலியில் நகர்ந்து உட்கார்ந்து கொண்டாள். அவள் முதுகில் இனம் தெரியாத ஒன்று உடலுக்குள் செல்வது போன்ற பிரமை.

படத்துக்குப் பின்னால் பென்சிலால் எழுதப்பட்டிருந்த வார்த்தைகளை மீண்டும், மீண்டும் படித்தாள். 'இதுதான் அம்மா'... இந்த வார்த்தைகளை எழுதியது யார்? கையெழுத்தைப் பார்க்கும்போது அதை எங்கேயோ முன்பே பார்த்தது போல் ஓர் எண்ணம்.... பார்வதியுடையதா? சே என்ன மடத்தனம்! பார்வதியே தன் புகைப்படத்



# வெகுளன் ராஜகுமாரன்

ராண்டார் கை

தின் பின்புறம் 'இதுதான் அம்மா' என்று எழுதிக் கொள்வாளா? வீட்டில் புகைப் படங்களே இல்லாதபோது பார்வதி இதை மட்டும் ஏன் எடுத்து வைத்திருக்க வேண்டும்? கையெழுத்து யாருடையது என்று தெளிவாகத் தெரிந்து விட்டால், எல்லா விஷயங்களும் நன்றாகவே ஓரளவுக்குப் புரிந்துவிடும். அதுதான் தான் முதலில் செய்ய வேண்டிய வேலை. அவசர அவசரமாகக் கீழே சிதறிக் கிடந்த பொருள்களை யெல்லாம் எடுத்துச் சிகப்புப் பெட்டியில் வைத்துச் சரி செய்தாள். அதை மூடிவிட்டுக் கட்டிலுக்கு அடியில் முன்பிருந்த இடத்திலேயே வைத்துவிட்டாள். கையிலிருந்த புகைப்படத்தை இன்னும் சற்று அழுத்திப் பிடித்துக் கொண்டு வேகமாக ஓடினாள்.



பார்வதியின் படுக்கை அறை வெறிச்சோடியிருந்தது. அதற்குள் நுழையும்போது ப்ரியாவின் மனத்தில் ஒரு புதுவிதமான பயம் புகுந்து துளைக்கத் தொடங்கியது. தனக்குப் பழக்கமான பார்வதியின் படுக்கை.... சோபாக்கள்... நாற்காலிகள்... மூலையில் இருக்கும் ஸ்டீல் பீரோ, மேசை... இவை எல்லாமே தன்னை மிரட்டுவது போல் ஒரு பிரமை... வேகமாகச் சுவரின் ஓரமாக இருந்த மேசையின் அருகே சென்றாள். அதற்கு மேலே வைக்கப்பட்டிருந்த சிறிய பெட்டி அவளை முறைத்துப் பார்த்தது. ஒரு கையால் அதை அழுத்திப் பிடித்துக் கொண்டு அதி உள்ள கீழ் டிராயரை வெளியே இழுத்தாள். அதற்குள் ஒரு சிறிய காகிதத் துண்டு. இரிவு வந்த நாளன்று அதை அவள் பத்திரமாக உள்ளே வைத்திருந்தாள். அந்தச் சில நாட்களிலேயே அந்தக் காகிதத்தின் மதிப்பு மிகவும் உயர்ந்து விட்டது என்ற எண்ணம் அவள் மனத்தில் பளிச்சிட்டது. காகிதத்தை அவசர அவசரமாகப் பிரித்தாள். அவள் கண்கள் மேல் வரியை மட்டும் ஊடுருவிப்பார்த்தன. 'மிஸஸ் பார்வதி' என்ற பெயர்

ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருந்தது. சந்தேகமே இல்லை! அந்தக் கையெழுத்துத் தனக்குப் பழக்கமானதுதான். டாக்டர் ஆனந்துடையது! தன் கையிலிருக்கும் மருந்துச் சீட்டை எழுதியவரும், புகைப் படத்தின் பின்புறம் அந்த மூன்று வார்த்தைகளை எழுதியவரும் ஒருவரே... டாக்டர் ஆனந்த்.

அப்படியென்றால் அந்தப் புகைப்படத்துக்குக் காரணமாக இருந்தவரும் டாக்டர் ஆனந்தேதான். சந்தேகமில்லை! அதாவது டாக்டர், பார்வதியை அவளுக்குத் தெரியாமல் படம் எடுத்து. அதற்குப் பின்புறம் 'இதுதான் அம்மா' என்று ஆங்கிலத்தில் எழுதி கிரிஷுக்கு அனுப்பி வைத்திருக்கிறார். எதற்காக? காரணத்தைப் பற்றி நினைக்கும் பொழுதே ப்ரியாவின் உடல் நடுங்க ஆரம்பித்தது.... ஆமாம். சந்தேகமில்லை. டாக்டருக்கு ஏற்கனவே கிரிஷைத் தெரியும். அன்று பார்வதிக்கு முன்னால் இருவரும் முதன் முறையாகச் சந்தித்துக் கொள்வது போல் நாடகமாடி இருக்கிறார்கள். கிரிஷ் பார்வதியை முன்னால் பார்த்ததேயில்லை. அவளை அறிமுகப் படுத்துவதற்குத் தான் இந்தப் புகைப்படம்!

ஆமாம். சந்தேகமில்லை. கிரிஷ் என்று சொல்லிக் கொண்டு வீட்டில் நுழைந்தவன் பார்வதியின் மகன் அல்ல. அவன் ஒரு போலி. டாக்டர்தான் அவனை உருவாக்கியிருக்கிறார். பார்வதியின் சொத்துக்களைப் பறித்துக்கொள்ள டாக்டர் ஆனந்தின் சூழ்ச்சியின் அடிப்படைதான் கிரிஷ்...

யார் இந்தக் கிரிஷ்? எங்கிருந்து வந்தான்? தன்னை அணைத்து உடலில் புதுப் புதுஉணர்ச்சிகளை உண்டாக்கினவன் போலியா?

அந்த இருளடைந்த சூழ்நிலையில் ஒரு வெளிச்சக் கோப்பை — மீஞ்சூர் கோவிந்தராஜாச்சாரி! வக்கீல் தொழிலில் முன் வரிசையில் நிற்கும் மனிதர். அந்தக் காலத்துப் பண்பாடு, நேர்மை, ஒழுக்கம், மனிதாபிமானம் இவைகளையெல்லாம் கவசமாக அணிந்தவர். பார்வதிக்கு நெருங்கினவர். தன்மேல் பாசம் உள்ளவர். அப்படிப்பட்ட ஒருவரின் உதவியை நாடினால் என்ன? நிலைமையை எடுத்துச் சொன்னால் நிச்சயமாகக் கரம் நீட்டிக் காப்பாற்றுவார்....

---

அவன்: "'அந்த 7 நாட்கள்' படத்தின் கதை என்னடா?"

இவன்: "நான் இன்னும் படம் பார்க்கலே! மாதத்தின் கடைசி வாரத்தில் சிங்கிள் டீக்குக் கூட சில்லறையில்லாமல் கஷ்டப்படுகிற என்.ஜி.ஓ.வைப் பற்றிய கதையாக இருக்கலாம்!"

உ. ராஜாஜி



வேகமாக ஃபோன் இருக்கும் இடத்துக்கு ஓடினாள்.

"ஹலோ! கோவிந்தராஜாச்சாரி ஹியர்."

"ஹலோ ஸார் ப்ரியா பேசறேன்.... ஸார் புதுசா ஒரு விஷயம் முளைச்சிருக்கு. எனக்கு.... எனக்கு.... ரொம்பப் பயமா இருக்கு ஸார். நீங்கதான் ஹெல்... ஹெல்ப் பண்ணணும்."

"என்ன ப்ரியா என்ன ஒன் குரலே ஒரு மாதிரியா இருக்கே. எனிதிங் ராங்?"

"ஸார்.... நா'.... நா'.... ஸார்.... ஃபோன்லே அதைச் சொல்ல முடியாது. ஸார். நேரிலே பார்த்துத்தான் அதைச் சொல்லணும். ஒங்களை உடனே பார்க்கணும் சார்."

சில நொடிகள் இருவருமே மௌனமாக இருந்தார்கள்.

"ப்ரியா... என்னம்மா ஆச்சு ஏதாவது ப்ராப்ளமா உயிலைப் பத்தி...."

"இல்லே ஸார்... இது அதைவிடப் பெரிசு!"

"அப்படியா! நான் அங்கே வரட்டுமா அம்மா"

"இல்லே ஸார். நானே அங்கே வரேன். அதுதான் எல்லாருக்குமே நல்லது..."

டிங் டாங்! டிங் டாங்!

வாசற் கதவு மணி ஒலமிட்டது. நடு நடுங்கிப் போன ப்ரியா ஃபோனை அப்படியே கீழே வைத்து விட்டாள். கிரிஷ்! பாவி அதற்குள் வந்து விட்டானே...

வேகமாக ஓடிப்போய் வாசல் கதவைத் திறந்தாள். அவனைக் கண்களாலேயே கரைத்துக் குடித்துக் கொண்டு உள்ளே நுழைந்தான் கிரிஷ். லேசாக அவள் கன்னத்தைக் கிள்ளினான்.

ஃபோன் திடீரென்று அலறத் தொடங்கியது!

"ப்ரியா அந்தக் கால் எனக்காகத்தான் இருக்கும். நம்ம டாக்டர் அந்தப் பெரிய ஆளோடு பேசிட்டு என்னைக் கூப்பிடறேன்னு சொன்னார். காலை நானே அட்டன்ட் பண்றேன். நீ குடிக்கறதுக்கு ஏதாவது கொண்டு வா."

ப்ரியாவுக்கு உடல் நடுங்கியது.

"ஹலோ... யாரு மிஸ்டர் சாரியா! கிரிஷ் பேசறேன் ஸார்... என்ன ப்ரியாவோட பேசணுமா? ஓஹோ மம்மி உயில் விஷயமாவா? பேசுங்க பேசுங்க...

"ப்ரியா... ப்...ரி...யா.... ஒனக்கு.... ஃபோன்...." கிரிஷ் கத்துவது அவளை மீண்டும் இந்த உலகத்துக்கு அழைத்து வந்தது. சமையல் அறையிலிருந்து ஒரு வெள்ளிடம்ளரில் மோரை எடுத்துக்கொண்டு வந்து அவனிடம் கொடுத்தாள். அவன் அதை உறிஞ்சிக் குடித்துக் கொண்டே ஃபோனுக்கு அருகிலேயே நின்றான்!

"ஹலோ ப்ரியா ஹியர்" — அவள் குரல் கடலுக்கு அடியிலிருந்து பேசுவது போல் இருந்தது.

"ப்ரியா நான்தான்...அங்கே என்னம்மா நடக்கறது? நீ வந்து...."

# யூ.எல்.ஐ.பி. ✚

# பாதுகாப்புக்கு மறு பெயர்




## அனைத்தும் அடங்கிய ஒரே சேமிப்புத் திட்டம்

மற்ற திட்டங்களைவிட பல்வேறு நன்மைகளைக் கொண்ட சிறந்ததொரு திட்டம்தான் யூ.எல்.ஐ.பி. +. உங்களுக்கும் உங்கள் குடும்பத்துக்கும் பாதுகாப்பு அளிக்கும் சேமிப்புத் திட்டம்.

யூ.எல்.ஐ.பி. + ன் நன்மைகள்

- உயர்ந்த வருமானம். உங்கள் சேமிப்புத் தொகை ரூ. 12000 திட்ட முடிவில் (10 ஆண்டில்) ரூ. 18000 மாகவும் (15 ஆண்டில்) ரூ. 22000 மாகவும் உயர்ந்து விடுகிறது.
- வரிச்சலுகை. இத்திட்டத்தில் முதலீடு செய்யும் உங்கள் தொகைக்கு பூரண வருமான வரி விலக்கு உண்டு.
- விபத்து பாதுகாப்பு. நீங்கள் எடுக்கும் திட்டத்தின் மதிப்பு எதுவானாலும், ரூ. 15000 வரை உங்களுக்கு விபத்து பாதுகாப்பு அளிக்கப்படுகிறது.
- ஆயுள் பாதுகாப்பு. நீங்கள் சேரும் திட்டத்தின் தொகைக்கு சமமாக உங்களுக்கு ஆயுள் பாதுகாப்பு அளிக்கப்படுகிறது. மருத்துவ பரிசோதனை தேவையில்லை.
- ரூ. 24000 வரை சேமிக்கலாம். ரூ. 12000க்கு ஒரு திட்டமும் அதிலிருந்து 3 வருடங்கள் கழித்து அதே தொகைக்கு மற்றுமொரு திட்டமும் எடுத்துக் கொள்ளலாம்.

பாதுகாப்பான வாழ்க்கைக்கு இன்றே யூ.எல்.ஐ.பி. திட்டத்தில் சேர்ந்திடுங்கள்.

இதர விபரங்களுக்கு எங்களையோ அல்லது எங்கள் ஏஜெண்டுகள் மற்றும் தலைமை பிரதிநிதிகள் அல்லது உங்களுக்கு அருகிலுள்ள பாங்க் ஆப் பரோடாவின் கிளைகளையோ அணுகுங்கள்.

எங்கள் தலைமை பிரதிநிதிகள் :

ஏ. தனபால், 10 ஜே. ஹாஸர் ரோடு கோயம்புத்தூர் 641 018. போன் : 34776 (கோயம்புத்தூர், பெரியார் மாவட்டங்களுக்காக)

எம். ராமமூர்த்தி, 30, எல்.ஐ.சி. காலனி, மதுரை-625 002 (மதுரை மாவட்டத்துக்காக)

கே. முத்துசாமி, 52-ஏ, வ.உ.சி. நகர், தஞ்சாவூர்-613 007. போன் : 1224 (தஞ்சாவூர் மாவட்டத்துக்காக)




## யூனிட் டிரஸ்ட் ஆப் இந்தியா

(ஒரு பொதுத்துறை நிதி நிறுவனம்) தலைமை செயலகம் : பம்பாய்-20

தெற்கு பிராந்திய செயலகம் :
ரெஜினு மேன்ஷன், 46, செகண்ட்லைன் பீச், சென்னை-600 001. தொலைபேசி : 27433

**உங்கள் சேமிப்பின் தொடக்கம் யூனிட்டுகளாகவே இருக்கட்டும்**

UTI-62-81-Tam

''நான் வரேன் ஸார்... அந்த ப்ரோபேட் மேட்டர், அந்த பாங்க் அக்கவுண்ட்டு... கொஞ்சம் ஹர்ரி பண்ணுங்கோ ஸார்...''

''ப்ரியா நீ என்ன... ஓஹோ அவன் பக்கத்துலேயே நிக்கருனு புரிஞ்சுடுத்து. ப்ரியா நீ உடனே வா.. சமாச்சாரம் எதுவா இருந்தாலும் நீ தைரியமா இரு. நான் இருக்கேன்... மேலே பகவான் இருக்கார்....'' ஃபோனை வைத்து விட்டார் அவர்.

''ப்ரியா, அந்த வக்கீல் என்ன சொல்றார்? நீ உடனே கிளம்பிப் போ. இந்த வக்கீலுங்கள்ளாம் ஸ்குரு கொடுத்துண்டே இருந்தாத்தான் வேலே செய்வாங்க.'' கிரிஷ் ஃபோனை அவள் கையிலிருந்து எடுத்து வைத்தான். அவளை இறுக அணைக்க முயன்றான்.

''கிரிஷ் நோ...ப்ளீஸ் இப்ப நான் அந்த மூட்லே இல்லே... ப்ளீஸ்... சாரி வேறே ஒடனே வரச் சொல்லி யிருக்காரு. இதெல்லாம் அப்புறம் வெச்சக்கலாம். நான் எங்கே ஓடியா போப்போறேன்.''

''என்ன ப்ரியா இது... ரொம்ப ஓல்டு மாடலா இருக்கியே... ''என்று கூறி, கிரிஷ் பேசாமல் தன் அறையை நோக்கிச் சென்றுவிட்டான்.

நேராகத் தன் அறைக்குச் சென்று படுக்கையில் சாய்ந்து விட்டாள். சற்றுநேரமாவது ஓய்வு எடுக்க நினைத்தாள். முடியவில்லே.

''ப்ரியா!''

கண்களைத் திறந்து கொண்டு எழுந்து உட்கார்ந்தாள். படுக்கை அறைக் கதவருகே கிரிஷ் நின்று கொண்டிருந்தான். அழுத்தமான நீல நிற பாண்டும், உடலைக் கவ்விய வெள்ளை 'டி' ஷர்ட்டும் அணிந்திருந்தான்.

''ப்ரியா நான் கௌம்பறேன்... திரும்பி வர்ரதுக்கு ரொம்ப லேட்டாகும்னு நெனக்கிறேன். தலைக்கு மேலே வேலே இருக்கு... அதான் மம்மி பணம் விஷயம். அதை கவனி. அதுதான் ரொம்ப முக்கியம்.''

''வந்து... மம்மியோட வில் எனக்கு வேணுமே. வக்கீல் கிட்டக் கொடுக்கறதுக்கு. நான் அன்னிக்கு ஒங்க ரெட் பாக்ஸ்லே வெச்சேன். ஞாபகமிருக்கில்லே. காலேலேயே கேக்கணும்னு நெனச்சேன். மறந்துபோச்சு.''

''ஓ மறந்தே போச்சு ப்ரியா. மம்மி ஸ்டீல் ஸேஃப் இருக்கே அவுங்க ரூம்லே, அதுலே வெச்சிருக்கேன், அந்த உயிலே. அங்கதான் இருக்கும். தேடிப்பார்த்து நீயே எடுத்துக்க'' என்று கூறிவிட்டுச் சென்றுவிட்டான்.

பார்வதியின் உயிலே சேஃபுக்குள்ளே தேட ஆரம்பித்தாள். அந்த ஆபரணப்பெட்டிகளை ஒவ்வொன்ருக வெளியே எடுத்து வைத்தாள். ஒரு பெட்டியைத் தவிர மீதி யெல்லாமே பூட்டப்பட்டிருந்தன.

பூட்டப்படாமல் இருந்த பெட்டியைத் திறந்தாள். உள்ளே கத்தை கத்தையாகப் பத்து ரூபாய் நோட்டுகள்!

உயிலே மீண்டும் தேடினுள். காகிதங்கள், டவல்கள், ஸ்கார்ஃபுகள் இவைகளுக்குப் பின்னால் அடைத்து வைக்கப் பட்டிருந்தது, அந்த நீல நிறக் கவர். அவசர அவசரமாக அதை வெளியே எடுத்தாள். அத்துடன் பாதி கிழிந்திருந்த ஒரு பெரிய கவரும் வெளியே வந்து தரையில் விழுந்தது! அதன் உள்ளேயிருந்ததெல்லாம் வெளியே வந்து விழுந்தன.

எல்லாமே லேசான மஞ்சள் படிந்த காகிதங்கள். பல ஆண்டுகளுக்கு முன்பு எழுதப்பட்ட கடிதங்கள்! தரையில் முட்டி போட்டு உட்கார்ந்து கொண்டு அந்தக் கடிதங்களை முறைத்துப் பார்த்தாள். எல்லாக் கடிதங்களிலும் ஒரே மாதிரி கையெழுத்துத்தான் இருந்தது. அத்தனை கடிதங்களையும் எழுதியவர் ஒருவரே. ஒரு கடிதத்தை எடுத்துப் புரட்டிப் பார்த்தாள். கடிதத்தின் முடிவில் அழகான கையொப்பம்... மல்லிக்! பார்வதியின் ராணுவ வீரக் கணவன்!

(தொடரும்)

---

# தீர்ப்பு



● நீதிபதி: தீர்ப்பு வழங்கு முன்னர் நானே நாடகத்தை ஒரு தடவை பார்த்துவிட்டேன். என்னைப்போல ஒரு ஜட்ஜைக் கொஞ்சம் அசடுப் பிச்சு காரெக்டரா உருவாக்கியிருந்த போதிலும் அது என் ஜட்ஜ்மென்டைப் பாதிக்க நான் விடப்போவதில்லே. சுஜாதா டாக்டர்களுக்குச் சாதாரணமாக ஏற்படும் பிரச்னைகள் மூன்றை எடுத்து அலசியிருக்கார். கருணைக் கொலே; கருச் சிதைவு; புதிய மருந்தை நோயாளி மீது பரீட்சித்தல் ஆகிய இவை சில சந்தர்ப்பங்களில் நியாயமாகும் என்று எடுத்துச் சொல்லி யிருக்கார். ஆனல் அவருடைய பிரதான தாக்குதல் வேறே. பொறுத்துப் பொறுத்துப் பார்த்து தாங்க முடியாமல் போய்க் கோபம் பொத்துக்கொண்டு வர, லஞ்ச ஊழல் அசுரன் மேலே பாய்ந்து பிராண்டி யிருக்கார்! இப்படி நாடகம் எழுதியதால் சமுதாயத்தைத் திருத்துவதில் உடனடியாக வெற்றி கிட்டாவிட்டாலும் கலேப் படைப்பு என்ற அளவில் அடையும் வெற்றி, மனச் சோர்வு ஏற்படா திருக்க டானிக்காய் அமையும். முயற்சியைக் கைவிடாதிருக்க உதவும்.

எனவே, இதுபோல மேலும் பல நாடகங்களை சுஜாதா எழுதிக் குவிக்க வேண்டும் என்று கடுமையான தண்டனை விதிக்கிறேன்!

-குட்டிகிருஷ்ணன்

# டாக்டர் பட்டம் கிட்டுமா?




சுருக் பதில்கள்

⌘ மகாலட்சுமி, நாகர்கோவில்
கே. ஜோஹரின் ஆகாஷ்பாபா சரடுதானே?
ப: சரடாக இருக்கலாம் என்றே தோன்றுகிறது. அவர் வீட்டுக்கு பாபா வந்து தண்ணீர் கேட்டாராம். தண்ணீர் இல்லை என்றதும் 'விஸ்கியாவது கொடு' என்று கேட்டு விஸ்கியைத் தண்ணீராக மாற்றினாராம். வீடு என்றால் ஒரு டம்ளர் தண்ணீர்கூடவா இருக்காது! அதுவும் ஜோஹர் வீட்டில் ஃப்ரிஜ்ஜில் தண்ணீர், ஐஸ், சோடா குளிர்பானங்கள் எல்லாம் இருக்குமே. மற்றது எப்படியோ, தண்ணீர் சம்பவம் காதில் பூ சுற்றுகிறது!

⌘ எல். ரவிசங்கர், பெருங்களத்தூர்
கே. எல்லா இசைகளுக்கும் மூலமான கர்நாடக இசை இன்று நலிந்து விட்டது எதனால்?
ப: நலிந்து விட்டதா? யார் அப்படிச் சொன்னது? ஒரு நாளும் கர்நாடக சங்கீதம் நலிவடையாது. வேறு சில சங்கீதங்கள் பரபரப்பாகப் பாப்புலராகி இருக்கலாம். வந்த வேகத்தில் மறைந்தும் போகலாம். ஆனால் பல ஆயிரம் வருடங்கள் சென்றாலும் நமது கர்நாடக இசை, பக்தி உணர்வு, பரத நாட்டியம் போன்றவை இருந்து கொண்டேதான் இருக்கும்.

⌘ வி. ஆர். ராமதுரை, பொள்ளாச்சி
கே. சரிதாவின் நடிப்பில் நாளுக்குநாள் மெருகு ஏறி வருகிறது என்கிறேன் நான். நீங்கள்?
ப: சரிதா நன்றாகத்தான் நடிக்கிறார். நடிப்பு இன்னும் சிறப்பாக அமையும் சற்றுத்தடிப்பில்லாமலிருந்தால்.

⌘ கு. மா. கணேசன், குப்புச்சிபாளையம்
கே. உமது பதில்களை ஆராய்ச்சி செய்து வருகிறேன். டாக்டர் பட்டம் கிட்டுமா?
ப: கிட்டும். டாக்டரிடமிருந்து பட்டம் கிட்டும், பைத்தியம் என்று!

⌘ க. ராமசந்திரன், மதுரை-19
கே. அனுபவங்கள் என்ன சொல்லிக் கொடுக்கின்றன?
ப: ஒவ்வொரு அனுபவமும் ஒரு பாடம் மாதிரி. ஆனால் நம்மில் பலர் பாடத்தைச் சரியாகப் படிப்பதில்லையாகையால் பல சோதனைகளைச் சந்திக்க வேண்டியிருக்கிறது.




⌘ செங்கோடன், சின்னப்பம்பட்டி
கே. பாம்பு கடித்தால் வாழைப்பட்டை சாறு கொடுக்கலாமா?
ப: சாறைக் கொடுப்பதுடன் வாழைப்பட்டையின் மேல் பாம்பு கடியுண்டவரைப் படுக்க வைத்தால் நல்ல பலன் கிடைக்கும் என்று கி. ஆ. பெ. விஸ்வநாதம் ஒரு சொற்பொழிவில் கூறினார். பலிக்கவில்லை எனில் அவரையேகேட்கவும்!

⌘ ஏ. கே. சங்கர், சென்னை-44
கே. ப்ளஸ் டூ படிக்கும் மாணவனாகிய எனக்கு நீங்கள் கூறும் அறிவுரை என்ன?
ப: கேள்விகளைக் கல்கிக்கு அனுப்பும் தபால் கார்டில் விலாசம் எழுதும்போது 'ரேஸ் கோர்ஸ் ரோட்' என்பதில் கோர்ஸ் என்பதற்குச் சரியான ஸ்பெல்லிங்கைத் தெரிந்து கொண்டு எழுதுங்கள் என்பதே!

⌘ ஏ. கே. நாசர், லெட்சுமாங்குடி
கே. எழுத்தாளர் பாலகுமாரனைக் கண்டு நீங்கள் பெருமிதப்படும் விஷயம் எது?
ப: அவரது கதைகளில் நடையும், சொல்லும் சிறப்பாக அமைவது. கதையைப் படித்த பிறகு வெகு நேரம் வரை அது நம்மை ஆக்கிரமித்துக் கொண்டிருப்பது. வித்தியாசமாக, அதே சமயம் இயற்கையாக அமையும் வார்த்தை ஜாலங்கள்.

⌘ எல். ஆர். விஜயகுமார், சென்னை-28
கே. 'ஏக் துஜே கேலியே' படத்திற்குச் சென்னையில் வரவேற்பு எப்படி இருக்கும்?
ப: பம்பாய், டில்லி போன்ற ஊர்களில் தென்னிந்தியர்கள், 'நம்ம கமல் படம்' என்று ஆர்வத்தோடு பார்த்து வருகின்றனர். மற்ற வெற்றிகரமான இந்திப் படங்களை விட இதன் வெற்றி ஒரு படி அதிகம்! எனவே மற்ற இந்திப் படங்கள் சென்னையில் ஓடுவதை விடச் சிறப்பாக இது ஓடவேண்டும் — நியாயமாக!

பரிசு பெறுபவர்:

எல். ரவிசங்கர்
2, வினையாபதி தெரு, ஸ்ரீனிவாச நகர்
சென்னை-600063




அண்ணன் திருதராஷ்டிரனால் அனுப்பப் பட்டு, இந்திரப் பிரஸ்தம் சென்ற அறவோன் விதுரன் அங்கு தன்னுடைய மற்றொரு உடன்பிறப்பான பாண்டுவின் புத்திரர்களான பாண்டவர்களைச் சந்தித்துத் திருதராஷ்டிரனின் கருத்தைக் கூறுகிறான். அஸ்தினபுரம் வந்தால் அங்கு புதிதாக அமைத்துள்ள மண்டபத்தைக் காணலாம் என்று சொன்னதுடன், அம்மண்டபத்திலே மாயச் சகுனியுடன் சூதாடவும் நேரலாம் என்பதையும் விதுரன் தருமனுக்குச் சொல்லுகிறான். சிறிய தந்தை விதுரனின் கருத்தறிந்த தருமன் சூதாட்டத்துக்கு எதிர்ப்புத் தெரிவிக்கிறான் முதலில். பின்னர் 'இதுவும் விதியின் விளையாட்டு' என்று கூறித் தம்பியருடன் அஸ்தினபுரம் செல்ல இசைவு தெரிவிக்கிறான்.

வழக்கம் போல் வீமன் முதலில் வீரம் 'பேசுகின்றான். ஆயினும் துரியோதனாதியரை எதிர்த்துப் போரிடுவதற்கு இந்தச் சூதாட்டமே தொடக்கமாக அமையுமென்று தெளிந்து, அவனும் அஸ்தினபுரம் செல்வதற்கு விருப்பம் தெரிவிக்கிறான்.

பாண்டவர்களும் பாஞ்சாலியும் பெரியோன் விதுரனுடன் கூடி அஸ்தினபுரத்துக்குப் பயணம் தொடங்கினர்.

வழியில் சரியான மாலை நேரத்திலே ஒரு பூங்காவிலே அர்ச்சுனனும் பாஞ்சாலியும் தனித்திருந்து அடிவானம் காட்டும் வண்ண ஜாலக் காட்சியை அனுபவிப்பதானது வியாச பாரதத்திலும் வில்லி பாரதத்திலும் காட்டப்படுகிறதென்றாலும் பாஞ்சாலி சபதத்திலே வில்லியையும் வியாசனையும் வெல்லக் கூடிய வகையிலே தமது புலமைத் திறனைப் பாரதி வெளிப்படுத்துகிறார்.

காளிதாசன் போன்ற மகாகவிகள் இயற்கையழகில் ஈடுபட்டு, கவிதை புனையும் ஆற்றல் பெற்றதுபற்றிப் பாரதியார் கூறுவது வருமாறு:

'நமது நாட்டில் வேதகாலத்து ரிஷிகள் பிரகிருதியின் சௌந்தர்யங்களைக் கண்டு மோகித்துப் பரமானந்தம் எய்தியவர்களாய் பல அதிசயமான பாடல்கள் பாடியிருக்கின்றனர். ப்ரகிருதியின் அழகைக்கண்டு பரவசம் எய்திக் காளிதாசன் போன்ற பெருங் கவிகள் அற்புதக் கவிகள் செய்திருக்கின்றனர்.'

இப்படிக் கூறும் பாரதியார் தாமும் இயற்கை அழகை வருணிப்பதிலேயே காளிதாசனின் வழித்தோன்றல் என்பதனைப் புலப்படுத்த முயல்கின்றார்.

மாலை நேரத்தில் அடிவானம் காட்டும் அழகோவியத்தைப் பாஞ்சாலிக்குக் காட்டி, பார்த்தன் பேசுகிறான்:

''பாரடியோ! வானத்திற்
புதுமை யெல்லாம்
பண்மொழீ! கணந்தோறும்
மாறி மாறி
ஓரடிமற் றோரடியோ
டொத்த லின்றி
உவகையுற நவநவமாத் தோன்றுங் காட்சி:
யாரடியிங் கிவைபோலப் புவியின் மீதே
யெண்ணரிய பொருள் கொடுத்து
மியற்றவல்லார்!.....
பார்! சுடர்ப் பரிதியைச் சூழவே படர்முகில்
எத்தனை தீப்பட் டெரிவன! ஓகோ!
என்னடீ யிந்த வண்ணத் தியல்புகள்!
எத்தனை வடிவம்! எத்தனை கலவை!
தீயின் குழம்புகள்! — செழும்பொன் காய்ச்சி
விட்ட ஓடைகள்! — வெம்மை தோன்றாமே
எரிந்திடுந் தங்கத் தீவுகள்! பாரடீ!.....
கருஞ் சிகரங்கள்! — காணடி, ஆங்கு
தங்கத் திமிங்கிலம் தாம் பல மிதக்கும்
இருட்கடல் ஆகா! எங்கு நோக்கிடினும்
ஒளித்திரள்! ஒளித்திரள்! வண்ணக்
களஞ்சியம்!

அஸ்தினபுரத்திலே பாண்டவர்கள் வரவேற்கப்படுகின்றனர். அந்த உத்தமர்களைக் காண நகர மக்கள் வீதிகளின் இரு மருங்கிலும் வெள்ளம் போல் திரண்டனர்.

பாண்டவர்கள் அரண்மனை விருந்தாளிகளாக ஏற்கப்படுகின்றனர். இப்போது தருமன் மன்னன் துரியோதனனை விடவும் உயர்ந்த அந்தஸ்தில் உள்ள சாம்ராஜ்ய சக்கரவர்த்தியல்லவா? அந்த அந்தஸ்திற்கேற்ப அரண்மனையிலே அவன் கௌரவிக்கப் படுகிறான்.

துரியோதனாதியரைப் பெற்றெடுத்த காந்தாரியின் அந்தப்புரத்திலே பாஞ்சாலி வரவேற்கப்படுகிறாள்.

இனி, அரசவையிலே நிகழும் சூதாட்டத்தைக் காண்போம்: அந்தச் சூதாட்டத்தின் போது பாரதி நிகழ்த்தும் ஏகாதிபத்திய எதிர்ப்புப் பிரசாரத்தையும் கேட்போம்.

சூதாட தருமனை அழைக்கிறான் சகுனி! தருமன் மறுக்கிறான். இருவருக்குமிடையில் சிறிது நேரம் வாதப் போர் நிகழ்கின்றது.

'அரசர் சூதாடிக் களிப்பது சரியா, தவறா?' என்பதனை விவாதப் பொருளாக்கிச் சகுனிக்கும் தருமனுக்கும் இடையே ஒரு விவாதத்தை உருவாக்கி, ஒரு பட்டி மன்றத்தையே நடத்தி விடுகிறார் பாரதியார். இந்தக் காட்சி வியாசனிலுமில்லை; வில்லியிலுமில்லை.

பட்டிமன்ற விவாதத்திலேயும் வெற்றி சகுனிக்குத்தான். இனி சூதிலே அவன் அடையவிருக்கும் வெற்றிக்கு இது அச்சாரமாகிவிடுகிறது.

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543)
Assistant Editor: P.S. Mani, Lay Out Artist: Kalpana, Editor: K. Rajendran



**மணமகள் தேவை**

நிம்மதியை நாடும்
வாலிபருக்கு
கொசுக்களை
விரட்டி அடிக்கும்
'வீராங்கனை' மணப்
பெண் தேவை. வயது,
ஜாதி-பிரச்னை இல்லை

வீராங்கனையை விட விரைந்து விரட்டிடும் **டார்டாய்ஸ்** கொசு
வர்த்திச் சுருள்.




இழக்காதீர் பொறுமையை - கொசுக்களை இழந்திட உதவிடும்
**டார்டாய்ஸ்** கொசு
வர்த்திச் சுருள்.




உங்களைப் பிடுங்கிடும்
கொசுக் கும்பலை ஓடவிரட்டிடும் **டார்டாய்ஸ்** கொசு
வர்த்திச் சுருள்

**கொளுத்துவீர்**
**டார்டாய்ஸ்-விரட்டுவீர்**
**கொசுக்களை!**
**டார்டாய்ஸ் கொசு**
**வர்த்திச் சுருளினால்.**



தயாரிப்பாளர்:
**பாம்பே கெமிகல்ஸ் ப்ரைவேட் லிமிடெட்**
.:போர்ட், பம்பாய்-400 023. .:போன்: 273831

